# எனக்கு இன்னுமொரு பாரி மிட்டாய் தா!




குழந்தைகள் எப்போதும் விரும்புவது பாரி மிட்டாய்கள். அவர்கள் இழக்கும் சக்தியை திரும்பவும் உடனுக்குடனே வழங்குபவை பாரி மிட்டாய்கள். அவை புத்தம் புதியவை. சத்துள்ளவை. ருசிமிக்கவை.

தயாரிப்போர்: பாரிஸ் கன்பெக்ஷனரி லிமிடெட், சென்னை-1

PRS-6396





# கல்கி

## பொருளடக்கம்

பரிதாபி, தை 29  பிப்ரவரி 11, 1973



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 23-00 | ரூ. 11-50 |
| இதர நாடுகள் | ரூ. 50-00 | ரூ. 25-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 27-00 | ரூ. 13-50 |


விலைவாசி யெல்லாம் ஏறிக்கிட்டே போவுதே?


நான் என்ன செய்ய? மத்திய அரசு கவனிக்க வேண்டிய அகில இந்திய பிரச்சினை!


குடியினாலே குடும்பங்கள் பல அழியுதே?


டில்லி அரசு பாரதம் முழுவதற்-கும் மதுவிலக்கு கொண்டு வரட்டுமே!


அது சரி, கறுப்புப் பணம் பண்றவங்க தொல்லை அதிகரிக்-குதாமே?


பாரத அரசு விதிக்கும் அபரி-மிதமான வரிகளே காரணம். கணக்-கில் காட்டாமல் பதுக்குகிறார்கள்!


தொழில் துறையில் தேக்கநிலை ஏற்பட்டிருக்-கிறதே?


மத்திய அரசு லைசென்சுகள் வழங்கத் தாமதப்படுத்துகிறது. போதிய அளவு நிதியும் ஒதுக்குவது இல்லை!


தமிழகத்தில் எங்கு பார்த்தாலும் வேலை நிறுத்தம்... கதவடைப்பு...


மத்திய அரசு ஊழியர்கள் கோஷ்டி கோஷ்டி யாக நாடு முழுவ-தும் உண்ணாவிரத-மும், வேலை நிறுத்தமும் செய்து வருகிறார்கள், தெரியாதா?


ஆமாம், மத்திய அரசு ஏதோ லஞ்ச ஊழல் புகார்களை விசாரிக்கப் போவதாக....


கூடாது! முடியாது! தமிழன் ஆட்சியில் டில்லி தலையிடுவதா? மாநில ஆட்சியில், மத்திய மந்திரிகளுக்கு என்ன வேலை?...

கல்கி
மலர் 32
இதழ் 28



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
-- பாரதியார்

# மின்விசை நெருக்கடி

ஜலமின் நிலையங்களில் மழையின்மையால் நீர்த்தேக்கம் குறைந்துள்ள காரணத்தினாலும் அனல்மின் நிலையங்களில் உற்பத்தி அதிகரிக்காததாலும் தமிழ்நாட்டுத் தொழில்களுக்கு 25 சதவிதம் குறைக்கப்பட்ட மின்சார சப்ளை இப்போது 40 சதமாக மேலும் குறைக்கப்பட்டுள்ளது. எவ்வளவு நாட்கள் இந்த நிலைமை நீடிக்கும் என்று சொல்ல முடியாது. ஜூன் மாதத்தில் பருவ மழை பெய்தால் நிலைமையில் அபிவிருத்தி காணலாம். நிலைமை மோசமாகி அதிக மின்வெட்டு ஏற்பட்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

இதனால் தொழில்கள் மிகக் கடுமையாகப் பாதிக்கப்பட்டுள்ளன. விலைவாசி ஏற்றத்தினால் அடக்கவிலை அதிகமாவதை உற்பத்திப் பெருக்கின்மூலமே சரிக்கட்ட வேண்டும். இந்த நிலைமையில் மின்சார சப்ளையும் குறைந்துவிட்டால் உற்பத்தி குறைந்து, லாபம் நஷ்டமாக மாறி, தொழிலாளர்களைக் கட்டாய விடுமுறை (Lay off)க் குள்ளாக்க வேண்டுமே என்ற கவலை ஏற்பட்டுள்ளது. தொழிலாளர்களைக் கட்டாய விடுமுறைக்குட் படுத்துவதிலுள்ள ஆபத்துக்களையும், கஷ்ட நஷ்டங்களையும் கணக்கிட்டுப் பார்த்தால், தொழில் நடத்துவது நல்லதா மூடிவிடுவது நல்லதா என்ற முடிவுக்கு வர முடியாமல் தவிக்கும் நிலையில் பலர் இருக்கின்றனர்.

சிறிய தொழில்களின் கவலைகள் இதை விடப் பயங்கரமானவை. மாதம் 2000 யூனிட்டுகள் மட்டுமே அவர்களுக்கு வழங்கப்பட்டுள்ள மின்சார சப்ளை. அதற்குமேல் போனால் அபராதக் கட்டணம். பல தொழில்கள் இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன்னர் தொடங்கி இப்போதுதான் உற்பத்தி தொடங்கும் தறுவாயில் உள்ளன. இவர்களுக்கு 2000 யூனிட்டுகள் மிகவும் குறைவு. மேலும் சிறிய தொழில்களின் இலக்கணமே சமீப ஆண்டுகளில் மாறிப் போய், சிறியனவாக ஆரம்பித்தவை கூடக் கொஞ்சம் கொஞ்சமாகப் பெரிய தொழில்களாக மாறிக் கொண்டு வருகின்றன. இவைகளுக்குக் குறைந்த பட்சம் 4000 யூனிட்டுகளாவது மாதந்தோறும் கொடுத்தால்தான் அவை போட்ட முதலுக்கும் வாங்கின கடனுக்கும் வட்டிக்கும் கட்டுப்படியாகும் வகையில் தொழில் நடத்த முடியும். ஏற்கனவே போடப்பட்ட மின்வெட்டினால் பல சிறு தொழில்கள் சுணங்கிக் கிடக்கின்றன. இப்போது போடப்பட்டுள்ள அதிகக் குறைப்பினால் பல தொழில்கள் தத்தளிக்கும் நிலைமையில் உள்ளன.

மனிதனுக்கு உணவு எப்படியோ அப்படி தொழில்களுக்கு மின்சார சப்ளை. இதை அரசாங்கம் வழங்க வேண்டும். மின் சப்ளையில் ஏகபோக உரிமையை அரசு தன்னிடம் வைத்துக் கொண்டுள்ளது. ஆனால் மின்சாரத் தேவையைப் பெருக்க எல்லா வித ஊக்கத்தையும் கொடுத்து விட்டு சப்ளை செய்ய முடியாத நிலையில் அரசு இருக்கிறது.

இந்த நிலைமையில் தொழில்களுக்கு நிவாரணம் அளிக்க உடனடியாகச் செய்ய வேண்டியது என்ன? தனியார் தொழிலதிபர்கள் தனிப்பட்ட முறையிலோ, பலர் சேர்ந்து கூட்டாகவோ மின்சார உற்பத்தி செய்து கொள்ளவும், அதை அவர்கள் பகிர்ந்து கொள்ளவும் அனுமதிக்கப்பட வேண்டும். இதற்காக டீசல் ஜெனரேட்டிங் யந்திரங்கள் இறக்குமதி செய்ய அவர்களை அனுமதிப்பதுடன், அந்நியச் செலாவணியும், இறக்குமதி வரி விலக்கும் வழங்கப்பட வேண்டும்.

தனியார் உற்பத்தி செய்யும் மின்சாரத்துக்கு அரசாங்கத்துக்குச் செலுத்த வேண்டிய கட்டணத்தை வஜா செய்ய வேண்டும். இவற்றைத் தவிர மின்சார விநியோகத்தில் தற்போது ஏற்பட்டுக் கொண்டிருக்கும் விநியோக நஷ்டத்தை (Transmission Losses) குறைத்தாலே மின்வெட்டில் பாதியைக் குறைத்துக் கொள்ளலாம் என்று விஷயமறிந்த வட்டாரங்கள் கருதுகின்றன.

எப்படியும் நீண்ட காலத் திட்டம் ஒருபுறம் இருந்தாலும் உடனடியாகப் பலன் தரக் கூடிய நடவடிக்கைகளையும் தமிழ்நாடு அரசு தனிப்பட்டோ, அல்லது மத்திய அரசுடன் விவாதித்தோ மேற்கொள்வது மிக அவசியம்.

# தமிழ் நாட்டிலே...

தீரன்

## ஆஸ்பத்திரியிலேயே அடிதடி!

மதுரையில் உள்ள அரசாங்க எர்ஸ்கின் மருத்துவ மனையில் சென்ற மாத இறுதியில் சீனியர் டாக்டர் ஒருவரை 'நர்ஸிங் ஆர்டர்லி' களான நான்கு கடைநிலை ஊழியர்கள் தாக்கியிருக்கிறார்கள். மேற்படி சீனியர் டாக்டர் தாக்கப்பட்டதைத் தொடர்ந்து எர்ஸ்கின் மருத்துவ மனையைச் சேர்ந்த டாக்டர்கள், ஹவுஸ் சர்ஜன்கள், வைத்தியக் கல்லூரி மாணவர்கள், பட்ட மேற்படிப்பு இண்டர்னீகள் ஆகியோர் நான்கைந்து நாட்கள் வேலைநிறுத்தம்செய்ய நேர்கிற அளவு நிலைமை வளர்ந்து விட்டது. வேலைநிறுத்தம் மாநில அளவிலும் பரவி விட்டது. சென்னை வைத்திய சங்கம் சீனியர் டாக்டர் தாக்கப்பட்டதைக் கண்டித்து அறிக்கை விட்டிருக்கிறது. டாக்டர்கள் ஸ்டிரைக் செய்து விட்டதன் காரணமாக ஆஸ்பத்திரியிலிருந்த ஆயிரக்கணக்கான நோயாளிகளும், சுமார் ஐயாயிரம் 'அவுட் பேஷண்டு' களும் தொல்லைப்படும்படி ஆயிற்று என்கிறார்கள். வேலைநிறுத்தம் தொடங்கிய முதல் இரண்டு நாட்களிலேயே ஐவர் சரியான சிகிச்சை கிடைக்காத காரணத்தால் இறந்துவிட்டனர் என்று கூறப்படுகிறது.

டாக்டர் ஜெய்குமார் அவர்களைத் தாக்கிய நான்கு நர்ஸிங் ஆர்டர்லிகளும் வேலையிலிருந்து சஸ்பெண்டு செய்யப் பட்டிருக்கிறார்கள். அவர்களை 'டிஸ்மிஸ்' செய்தாலொழிய வேலைக்குத் திரும்புவதில்லை என்று வேலைநிறுத்தம் செய்த டாக்டர்கள் தரப்பில் தெரிவிக்கப்பட்டது. கடையியில் சில தினங்களுக்குப் பின்னர் விசாரணைக்கு அப்புறம் அந்த நான்கு கடைநிலை ஊழியர்களையும் அரசாங்கம் டிஸ்மிஸ் செய்ய உத்தரவிட்டதை அறிந்து வேலைநிறுத்தம் கைவிடப்பட்டு, டாக்டர்கள் ஆஸ்பத்திரிக்குவந்திருக்கிறார்கள். 'சம்பவம் நடந்த மறுதினமே இந்த உத்தரவு இடப்பட்டிருந்தால் நோயாளிகளுக்கும் சிகிச்சை பெறுகிறவர்களுக்கும் இவ்வளவு தொல்லைகள் ஏற்பட்டிருக்காது' என்று ஸ்டிரைக் முடிந்த மறு தினத்தில் டாக்டர்கள் சங்க முக்கியஸ்தர் ஒருவர் கூறியிருப்பதை அரசின் கவனத்துக்குக் கொண்டுவர விரும்புகிறோம். மரியாதைகளையும் கட்டுப்பாடுகளையும் காப்பாற்றாவிட்டால் அப்புறம் ஆஸ்பத்திரிகளில்கூட ஆரோக்கியமான சூழ்நிலை இருக்க முடியாது.



திரு ஜகந்நாதாச்சாரியார்

## பெரும் புலவர் ஜகந்நாதாச்சாரியார்

தமிழ் நாட்டின் புகழ் பெற்ற கல்லூரிகளில் ஒன்றாகிய சென்னை விவேகாநந்தா கல்லூரியின் தமிழ்ப் பேராசிரியர், பெரும் புலவர் திரு தி. ஜகந்நாதாச்சாரியார் இவ்வாண்டு சேவையிலிருந்து ஓய்வு பெறுவதற்கு இருக்கிறார். கடந்த பல ஆண்டுகளாக விவேகாநந்தா கல்லூரியில் கற்ற மாணவர்களின் நினைவைவிட்டு நீங்காதவர் இவர். அடக்கமும், எளிமையும், பெரும் புலமையுமுடைய இவர் தமிழ்த் துறை, வரலாற்றுத் துறை ஆகியவற்றில் திறமை வாய்ந்த பேராசிரியர். தமிழாசிரியர்களுக்கு விளையாட்டுக்களில் அதிக

காந்திஜி பற்றி எதிர்காலம் அறிய வேண்டும் என்பதற்காக அவரது நாட்கள் அடங்கிய பெட்டகம் புதைக்கப்பட்டது. - செய்தி

உங்கள் புதைபொருள் ஆராய்ச்சியில் புதுசா ஏதோ கண்டு பிடிச்சீங்களாமே?

காந்தியைச் சுட்டுக்கொன்றது ஒருத்தன், ஆனால் காந்தீயத்தைக் குழிதோண்டிப் புதைத்ததில் அநேகமாக இந்தியர் எல்லாருக்குமே பங்குண்டு என்று தெரிகிறது!

வருடம் 2701ல்...




பட்ஜெட்டுக்கு முன்னால் மந்திரி சபையில் மாற்றங்கள் நிகழலாம். : ஒரு டில்லி நிருபர்

ஈடுபாடு இராது. ஆனால் ஜகந்நாதாச்சாரியார் இதற்கு விதிவிலக்கு. ஆண்டுதோறும் கல்லூரி ஆசிரியர்களுக்கு நடுவே நிகழும் விளையாட்டுப் பந்தயங்களில் தவறாது வெற்றி பெறும் முதியவரான இளம் பந்தயக்காரர் இவராகத்தான் இருப்பார். கம்பனில் பெரும் ஈடுபாடு கொண்ட பேராசிரியர். கடல் மடை திறந்ததுபோல் சொற்பொழிவுகளை நிகழ்த்தக்கூடியவர். இவரிடம் படித்த பல மாணவர்கள் இன்று நாட்டின் பல பகுதிகளில் அரிய பெரிய பதவிகளை அலங்கரிக்கிறார்கள். இவர் பதவியிலிருந்து ஓய்வு பெறும்போது இவரது சேவையைப் போற்றி நிதி வழங்கவும் உருவப்படத்தைக் கல்லூரியில் திறந்து வைக்கவும் மாணவர்களுக்கு இவர் பெயரால் பரிசுத் தொகை அமைக்கவும் சிறப்பான ஏற்பாடுகளை அன்பர்கள் செய்து வருகிறார்கள். இதற்கு நிதி அனுப்ப விரும்பும் பழைய மாணவர்களும், பிறரும் திரு பி. ராமன், துணைத் தமிழ்ப் பேராசிரியர், ஜகந்நாதாச்சாரியார் பாராட்டுக் குழு, விவேகாநந்தா கல்லூரி, சென்னை-4 என்ற முகவரிக்கு அனுப்பும்படி அமைப்பாளர்கள் சார்பில் அறிவிக்கப்பட்டிருக்கிறது.

## கண்ணகி கோயில் யாருக்குச் சொந்தம்?

கேரள மாநில எல்லையில் உள்ள பகுதியில் தமிழ்நாடு எல்லையிலிருந்து முப்பது கிலோ மீட்டர் தொலைவில் பெரியாறு தேக்கடி வன விலங்குகள் சரணாலய நடுவில் உள்ள ஒரு கோவிலைத் தங்களிடம் ஒப்படைக்குமாறு தமிழ்நாடு இந்து அறநிலைய இலாகா விடுத்த கோரிக்கையைக் கேரள மாநில அரசாங்கம் நிராகரித்து விட்டதாகத் தெரிகிறது.

தற்போது திருவாங்கூர் தேவஸ்வம் போர்டு கட்டுப்பாட்டிலுள்ள இக்கோவிலைச் சிலப்பதிகாரக் கதைத் தலைவி கண்ணகிக்காகச் சேரன் செங்குட்டுவன் மலைநாட்டில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு கட்டியதாக நம்பப்படுவதால்தான் தமிழ்நாடு அரசு இதன் நிர்வாகத்தைக் கோரியது. ஆனால் கண்ணகியைக் கொண்டாடிப் போற்றி நிர்வகிக்கும் பெருமை தங்களுக்கும் வேண்டும் என்று கருதியதாலோ என்னவோ கேரள சகோதரர்கள் கண்ணகிக்காகப் பழைய காலத்தில் கட்டப்பட்ட இந்தக் குகைக்

# அன்றும் இன்றும் சிலருக்கு அதே இளந்தளிர் மேனி!

## பியர்ஸ் சருமக் களை ...கன்னிப் பருவக் களை




இப்போது அழகுகவின அட்டைப் பெட்டியிலே கிடைக்கிறது
சென்னை நகரிலும், திருவனந்தபுரத்திலும், கோழிக்கோட்டிலும் மட்டுமே.

லின்டாஸ்- PS. 24 CP - 140 TM,

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

கோவிலைப் புதுப்பித்துத் தாங்களே நிர்வகிக்கப்போவதாகத் தெரிவித்து விட்டார்கள். கண்ணகியின் கோயில் சேர நாட்டில் இருந்தால் என்ன? தமிழ்நாட்டில் இருந்தால் என்ன? இரண்டும் இந்தியாவில்தானே இருக்கின்றன. கண்ணகி இந்தியாவுக்குச் சொந்தமே.

### சாட்சிகளை மிரட்டுகிறார்கள்!

திருச்சி இர்வின் ஹாஸ்டல் சம்பவங்கள் தொடர்பான நீதி விசாரணைக்குரிய சாட்சிகள் எல்லாம் கலைக்கப்படுவதாகவும், மிரட்டப்படுவதாகவும் தமக்குத் தகவல் கிடைத்திருப்பதாகத் திரு காமராஜ் அவர்கள்கோவையில் நடைபெற்ற தமிழ்நாடு விவசாயிகள் சங்க நிதியளிப்பு விழாக் கூட்டத்தில் கூறியிருக்கிறார். இர்வின் ஹாஸ்டல் சம்பவ விசாரணை பற்றி அவர் மேலும் குறிப்பிடுகிறபோது, சம்பந்தப்பட்ட அதிகாரிகளை மாற்றாமல் எந்த விசாரணை நடத்தினாலும் அந்த விசாரணை கண் துடைப்பாகவே இருக்கும் என்று கூறியிருக்கிறார். இப்படிப்பட்ட சம்பவங்கள் பற்றி நடத்தப்படும் விசாரணைகள் முற்றிலும் பாரபட்சமற்ற தன்மையில் இருக்க வேண்டும் என்பதையும் அவர் தெரிவித்திருக்கிறார். சாட்சிகளை யெல்லாம் கலைத்து விட்டு அல்லது பயமுறுத்திவிட்டு, அப்புறம் பாரபட்சமற்ற தன்மையில் நீதி வழங்குவது எப்படி முடியும் என்று மக்கள் சந்தேகப்படவே செய்வார்கள்.

### 'அந்தரங்க' உதவியாளர்

தமிழக முதலமைச்சரின் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் நடத்தும் ஆங்கில வார இதழ் ஒன்றுக்குச் சந்தா சேர்த்துக் கொடுக்கும் முயற்சியில் மாவட்டக் கலெக்டர் ஒருவரின் அந்தரங்க 'உதவியாளர்' இறங்கியதைக் கண்டித்துப் பத்திரிகைகளில் செய்திகள் வெளிவந்துள்ளன. திரு கருணாநிதியின் குடும்பத்து வார ஏடான 'ரைசிங் சன்' ஆங்கிலப் பத்திரிகைக்குச் சந்தா செலுத்தும்படி நிர்ப்பந்தப்படுத்தி மேலே குறிப்பிட்ட அதிகாரி பஞ்சாயத்து யூனியன் தலைவர்களுக்கும் மற்றவர்களுக்கும் சுற்றறிக்கை அனுப்பி யிருப்பது பற்றி முதல்வரிடம் நிருபர்கள் கேட்டபோது முதல்வர், ''சேலம் மாவட்டக் கலெக்டருடன் இது சம்பந்தமாக நான் தொடர்பு கொண்டு விசாரித்தேன். கலெக்டரின் அந்தரங்க உதவியாளர் வெளியிட்ட அந்த உத்தரவு கலெக்டருக்குத் தெரியாமலே நடந்து விட்டதாகத் தெரிகிறது. விசாரணை நடத்தி அந்த அதிகாரியின் மீது நடவடிக்கை எடுக்கச் சொல்லி யிருக்கிறேன்'' என்று பதில் கூறியிருக்கிறார். கலெக்டருக்குக் கூடத் தெரியாமல் கலெக்டராபீஸிலிருந்து உத்தரவு அனுப்புபவர்சம்பந்தப்பட்ட வாரப் பத்திரிகை மேல் எவ்வளவு 'அந்தரங்கப் பிரியம்' கொண்டிருக்க வேண்டும்!

### சொகுசு காரும் மின்சார வாரியமும்

மின்சார வாரியத்தின் நிதி நிலைமைகள் சரியில்லாத இந்தச் சமயத்தில் சுமார் லட்சம்

சங்கீத வித்வான் ஸ்ரீ ராமநாதபுரம் கிருஷ்ணன் அவர்களின் அகால மரணம் ரசிகர் அனைவருக்கும் சொல்லொணாத் துயரம் அளித்திருக்கிறது. முழுமதியாக வளர்ந்து வந்தவர் திடீரென அஸ்தமித்து விட்டார். தேர்ந்த சங்கீத ஞானம், மதுரமான சாரீரம், மக்களைக் கவரும் கச்சேரிப் பாணிச் சிறப்பு எல்லாம் வாய்ந்தவர் ஸ்ரீ ராமநாதபுரம் கிருஷ்ணன். வீணை தனம்மாள் வழிவந்த பரம சுத்தமான சம்பிரதாய வழியில் பற்றுக் கொண்டு அதனை முக்கியமாகப் பின்பற்றி இசையின் நல்வடிவைச் சித்திரித்து வந்தார். நம் நாட்டில் மட்டுமின்றி, அமெரிக்காவிலும் பல சிஷ்யர்களைப் பயிற்றுவித்தார். இவரிடம் இசையுலகு இன்னும் பல பணிகளை எதிர்பார்த்தது. காலன் கொடுமை செய்து விட்டான். ஸ்ரீ கிருஷ்ணனின் குடும்பத்தினருக்கு உளமார்ந்த அநுதாபங்கள்.



இசை உலகின் இழப்பு

## ராஜாஜி சிந்தனை

ஆராய்ச்சியின் மூலமோ, பரிசோதனை மூலமோ, வாதப் பிரதிவாதங்களின் மூலமோ நாம் ஆண்டவனை அடைய இயலாது. ஏனெனில் அவன் நமது இந்திரியங்களால் நிரூபணம் செய்யக் கூடிய அளவைத் துக்கும் அதிகமான ஒரு புதிர் ஆவான். பரிசோதித்தும், வாதித்தும், ஆராய்ந்தும் அறிய முடியாத போதிலும் கூட மனிதனுக்குப் பகவான் மிகவும் தேவைப்படுகிறான். காற்றைக் கண்ணால் பார்க்க முடியாவிட்டாலும், நாம் உயிர் வாழ அது அத்தியாவசியத் தேவையாக இருப்பதுபோல், நமக்குப் புலனாகாத பகவானும் அத்தியாவசியத் தேவையாக இருக்கிறான். பகவானை 'நிரூபித்து'க் காட்ட முடியாவிட்டாலும், அவனது தேவையை மிகவும் உணருகிறோம். இந்தத் தேவையை நாம் ஒப்புக் கொண்டு பூர்த்திசெய்து கொள்ளத்தான் வேண்டும். நம் அத்தியாவசியத் தேவையே தனக்குத் தானே 'நிரூபணமும்'கூட என்று சொல்லலாம். தாய் என்றால் என்ன, அவள் எப்படி உண்டாக்கப்பட் டிருக்கிறாள், அவளிடமிருந்து தான் எப்படி எதனால் உண்டாகினேம் என்பதெல்லாம் எந்தக் குழந்தைக்கும் தெரியாது. ஆனால் அதற்கு அன்னையின் தேவை மட்டும் நன்றாகத் தெரிகிறது. அவளிடம் இறுக ஒட்டிக் கொண்டு விடுகிறது. யாரராலும் குழந்தைக்கு அதன் தாயை 'நிரூபித்து'க் காட்ட முடியாது. ஆனாலும் குழந்தைக்கு அன்னையை விடப் பெரிய நிரூபணமோ, அன்போ, போஷாக்கோ வேறில்லை. தாய் இல்லாமல் குழந்தை என்னாகும்? ஆண்டவன் இல்லையேல் நாம் அழிந்துபோவோம். தனி வாழ்விலும் நசித்துப் போவோம். சமுதாய வாழ்க்கையிலும் நசித்துப் போவோம்.

நாகரிக சமுதாயத்துக்கு அஸ்திவாரம் பகவான்தான். லௌகிக அபிவிருத்தியும் செழிப்பும் அடைந்தாலும், இவற்றால் நாகரிக வாழ்வை ஏற்படுத்த முடியாது. ஆன்மிக முயற்சி, புலனடக்கம், ஒத்துழைப்பு இவை இன்றி நாகரிகம் இல்லை. பராசக்தியிடம் நம்பிக்கை வைத்தாலன்றி இவை ஏதுமில்லை.

நம் முன்னோர் போட்டிருந்த பாதைக்குத் திரும்புவோம். அந்தப் பாதையிலிருந்து விலகியதால்தான் ஐக்கியக் குலைவு, ஊழல், சுயநலப் போட்டி, துராசை, நேர்மைக் குறைவு இவற்றாலான சேற்றுக்குழிக்கு வந்து விட்டோம். சேற்றுக் குழியில் சில எரிவாயுக்கள் இயற்கையாகப் பற்றிக் கொண்டு ஒளி காட்டுவதுண்டு. அதை மோகினிப் பிசாசு என்பார்கள். அந்த ஒளியைத் தொடர்ந்துபோனால் புதை சேற்றில் அழுந்தவேண்டியதே! வெறும் லௌகிக அபிவிருத்தி, மோகினி என்கிற கொள்ளிவாய்ப் பிசாசு போலவே ஆகும். நமக்கு அதன் மாய ஒளி வேண்டாம். சமயம் என்கிற கை விளக்கு — நீண்ட நெடுங் காலமாக அநுபவபூர்வமாகப் பயன் தந்த சமய தீபம் — நமக்கு இருக்கிறது. அதன் ஒளி கொண்டு பழைய பாதைக்குத் திரும்புவோம்.

ரூபாய்க்குத் தமிழ்நாடு மின்சார வாரியம் ஓர் ஆடம்பரமான வெளிநாட்டுக் காரை வாங்கியிருப்பதாகப் பத்திரிகைகளில் செய்தி வந்திருக்கிறது. ஏற்கனவே மின்சார வாரியத்தில் உள்ள இரண்டு சொகுசு கார்களைத் தவிர இப்போது மூன்றாவதாக இந்தக் கார் வாங்கப் பட்டிருப்பதாகச் சொல்லுகிறார்கள். நிதி நிலைமை சரியில்லாத இந்தச் சமயத்தில் இவ்வாறு ஆடம்பரக் கார்கள் வாங்குவதை நிதி இலாகாவும், தணிக்கை அதிகாரிகளும் கண்டித்திருந்தும், அதைப் பொருட்படுத்தாமலே இந்த மூன்றாவது காரும் வாங்கப்பட்டிருப்பதாகச் சொல்லப் படுகிறது. வடநாட்டைச் சேர்ந்த கம்பெனி ஒன்று மின்சார வாரியத்துக்குச் சப்ளை செய்த சாமான்களுக்குப் பணம் பாக்கி நிற்பதாக வழக்குப் போட்டுச் சிறிது காலத்துக்கு முன் 'அட்டாச்மெண்ட்' உத்தரவு வாங்கியது. பணம் பாக்கி நிற்கிற வேறு பலரிடமிருந்தும் மின்சார வாரியத்துக்கு நோட்டீஸ்கள் வந்திருப்பதாகக் கூறப்படுகிறது. இந்த நிலைமையில் இப்படி ஆடம்பரச் செலவுகள் அவசியம்தானா?

## பக்தவத்சலத்தின் எச்சரிக்கை

தி. மு. க. வின் மாநில சுயாட்சிக் கோரிக்கை எவ்வளவு அபாயகரமானது என்பதைப் பற்றி எச்சரித்துத் திரு பக்தவத்சலம் ஓர் அறிக்கை வெளியிட்டிருக்கிறார்:

''மாநில சுயாட்சி என்ற பெயரில் தமிழக முதல்வர் எதை அடைய விரும்புகிறார் என்பதைப் பரிசீலனை செய்து பார்க்க வேண்டும். தமிழ்நாட்டுக்கு மாநில சுயாட்சியை நிச்சயமாகத் தாம் பெறப் போவதாக மதுரையில் முதலமைச்சர் கருணாநிதி மீண்டும் வற்புறுத்தியிருக்கிறார். மத்திய — மாநில உறவுகள் பற்றிய இராஜமன்னார் குழுவின் அறிக்கை சம்பந்தமான தி. மு. க. வின் ஆய்வு இன்னும் முடிவு பெறவில்லை. தி. மு. க. மந்திரிகள் மீதான புகார்கள் பற்றி விசாரிக்க விசாரணைக் கமிஷன் அமைக்க மத்திய அரசுக்கு அதிகாரமில்லை என்று முதலமைச்சர் சொல்லியிருக்கிறார். இந்த நிலையில் தமிழ்நாட்டைத் தனியானதொரு சுதந்திர நாடாக்க வேண்டும் என்பதைத் தவிர வேறு எதை முதலமைச்சர் விரும்புகிறார் என்று தெரியவில்லை. புதுக்கோட்டையில் கூடிய தி. மு. க. பொதுக்குழு 'மாநிலத்தில் சுயாட்சி, மத்தியில் கூட்டாட்சி' என்ற கோரிக்கையை வலியுறுத்துவதற்காகக் கட்சி விதிகளைத் திருத்தியிருக்கிறது. மத்தியில் பார்லிமெண்டரி அரசோ அல்லது பொறுப்பாட்சியோ எதுவுமே இருக்கக் கூடாதென்பதுதான் இதற்கு அர்த்தம் ஆகும். இப்போது தமிழ் நாட்டின் நிர்வாகத்துக்குப் பொறுப்பு வகிக்கும் தி. மு. க.வின் இந்த அபாயகரமான போக்கைப் பற்றி மத்திய அரசாங்கம் கவனமாகப் பரிசீலனை செய்ய வேண்டும்..''

நமக்கொரு சந்தேகம். விலைவாசி உயர்வு போன்ற பல பிரச்னைகளுக்கு மத்திய அரசு மீது பழியைப் போட்டுத் தாம் நழுவப் பார்க்கிறாரே தமிழக முதல்வர், மாநில சுயாட்சி ஏற்பட்டு விட்டால் யார் மீது பழி சுமத்த முடியும்?



# எழுத்தாளர் கடமை

ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சங்கராச்சாரிய சுவாமிகள்

சூட்சுமமான தத்துவங்களையும், சிரமசாத்தியமான சடங்குகளையும் சொல்கிற வேதங்களை நான்காகப் பிரித்து நான்கு சிஷ்யர்களுக்குப் போதித்தார் வியாசர். அந்தச் சூட்சுமங்களைப் புரிந்து கொண்டு, வேதம் விதிக்கிற யக்ஞ அநுஷ்டானங்களை ஏராளமான கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டுச் செய்யக்கூடியவர்களுக்கு இந்த சிஷ்யர்கள் வேதங்களைப் போதித்தார்கள். வேதங்களை இவ்வாறு வகுத்துப் பரப்பிய அதே வியாசர், அதே வேதங்களின் பரமதாத்பரியத்தை அனைவருக்கும் ரஞ்சகமான புராணங்களாக இயற்றினார். இவற்றைப் பொதுஜனங்களுக்கெல்லாம் பிரசாரம் செய்கிற பணியை சூதர் என்பவரிடம் ஒப்புவித்தார். புராணங்களைப் பிரசாரம் செய்து கொண்டேயிருந்ததால் அவர் சூதபௌராணிகர் என்றே பெயர் பெற்றார்.

வேதத்தில் 'சத்தியம் வத' என்று ஒரு விதி இருக்கும். அந்த விதியைக் கதாரூபமாக்கி ஜனங்கள் யாவரும் ஏற்குமாறு செய்கிறது ஹரிச்சந்திரன் வரலாறு. 'தர்மம் சர' என்கிற வேதத்தின் கட்டளைக்கு மகாபாரதம் முழுவதும் விளக்கமாகிறது. 'மாத்ரு தேவோபவ', 'பித்ரு தேவோபவ' என்கிற வேத வாக்கியங்களுக்கு ஸ்ரீ ராமனின் சரித்திரம் அற்புதமான பாஷ்யமாக இருக்கிறது. ஆத்ம விருத்திக்காக வேதத்தில் சொல்லியிருக்கிற சூக்ஷ்மமான விஷயங்கள் எல்லாம் இப்படிப் பொதுஜனங்கள் எல்லோருக்கும் சூத பௌராணிகர் வாயிலாக மிகவும் சுவாரசியமான முறையில் பிரசாரம் செய்யப்பட்டன.

தொன்றுதொட்டு பௌராணிகர்களின் பிரவசனங்கள் நம் தேசத்தில் எங்கு பார்த்தாலும் நடந்து வந்திருக்கின்றன. கல்வெட்டுக்களைப் பார்த்தால் கோயில்களிலெல்லாம் புராணப் பிரவசனம் நடந்து வந்திருப்பது தெரியும். நித்திய பூஜை போலவே புராணப் பிரவசனமும் கோயில்களில் அன்றாடம் நடக்க வேண்டும் என்று மானியங்கள் விட்டிருக்கிறார்கள். ஆலயத்தில் வழிபட்டும், புராணங்களை சிரவணம் செய்துமே சமீப காலம்வரையில் நம்முடைய பொதுஜனங்கள் சூதுவாதில்லாமல் யோக்கியர்களாக இருந்து வந்திருக்கிறார்கள். இக்கால நோக்கின்படி அவர்களுக்கு எழுத்தறிவு இல்லாமல் இருக்கலாம். ஆனால் அவர்கள் நல்ல பண்பு படைத்திருந்தார்கள் என்பதைப் பார்த்தால் அவர்களே வாஸ்தவமாகக் கல்வி பெற்றவர்கள் என்று சொல்ல வேண்டும்.

அச்சு இயந்திரம் கண்டுபிடிக்கும் வரையில் எல்லாக் கல்வியும் வாய்மொழியாகச் சொல்லிக் காது வழியாகக் கேட்டே வழிவழியாக வளர்ந்து வந்திருக்கிறது. அந்தக் காலத்தில் பனை ஓலையில் எழுதுகிற தேர்ச்சி பெற்றவர்கள் சிலரே இருந்தார்கள். மற்றபடி, பெரிய வேத வேதாந்தம் அநுஷ்டித்தவர்கள் கூட எல்லாம் செவி வழியேதான் கேட்டறிந்தார்கள். அச்சு இயந்திரம் வந்தது. அப்புறம் நிறைய புஸ்தகங்கள் ஏற்பட்டுவிட்டன. பௌராணிகர்களின் இடத்தைப் புத்தகங்கள் பிடித்துக் கொண்டன. பத்திரிகையாளர்களும் எழுத்தாளர்களும்தான் இன்றைய பௌராணிகர்கள். சூதரும் மற்ற பௌராணிகரும் எப்படி தர்மங்களை ரசமான கதைகள் மூலம் பொதுஜனங்களிடையே பிரசாரம் செய்தார்களோ, அவ்விதமே செய்ய வேண்டியது இன்றைய பத்திரிகையாளர்கள், எழுத்தாளர்களின் கடமை. ஜனங்களுக்குப் பிடித்ததை மட்டுமே சொல்வது என்று வைத்துக் கொள்ளக் கூடாது. அவர்களின் அறிவை, மனத்தை உயர்த்துகிற விஷயங்களையே எழுத வேண்டும் – இதைச் சுவாரசியமாகச் செய்ய வேண்டும். புதுப் புது விதங்களில் உத்தமமான விஷயங்களை உணர்த்த வேண்டும். பத்திரிகையாளர்கள் வாழ்நாள் முழுதும் மாணாக்கர்களாகவே இருந்தால்தான் தாங்களும் இப்படிப் புதுப் புது விஷயங்களை அறிந்து, மற்றவர்களுக்குப் பிரசாரம் செய்ய முடியும். சத்தியத்தைச் சர்க்கரைப் பூச்சிட்ட மாத்திரைகளாக்கித் தர வேண்டும். சர்க்கரைப் பூச்சுத்தானே ஒழிய, முழுக்கவும் சர்க்கரையாகிவிடக் கூடாது. வெறும் சர்க்கரை உடம்புக்கு நல்லதல்ல. வெறும் இந்திரிய ரஞ்சகமான சமாசாரங்களில்தான் ஜனங்களுக்கு அதிகக் கவர்ச்சி இருக்கிறது என்று சொல்லிக் கொண்டு, இவ்விதமே எழுதுவது சரியல்ல. இருதயபூர்வமாக ஜனங்களுக்கு ஆத்மாபிவிருத்தி தருகிற முறையில் எழுதுவதற்குப் பத்திரிகையாளர்கள் முனைந்தால், தானாகவே ஜனங்களுக்கு அதில் ருசி பிறக்கும். 'நம்மையும் உயர்த்திக் கொண்டு நம் வாசகர்களையும் நாம் உயர்த்த வேண்டும்' என்கிற கடமை உணர்ச்சியைப் பெற வேண்டும். இவ்விதம் ஆத்ம க்ஷேமம், லோக க்ஷேமம், சாந்தி, சுபிட்சம் எல்லாவற்றுக்கும் மெய்யான சேவை செய்கிற பாக்கியத்தைப் பத்திரிகையாளர், எழுத்தாளர்கள் பெறலாம்.

# பனிக் கால சரும வரட்சியா? உங்களுக்கு உள்ள இப் பிரச்சினை ரோம், லண்டன், பாரிஸ் நங்கையருக்கும் உண்டு

## அவர்கள் கண்ட வழியே உமக்கும் உசிதம்




புத்தழகுக் கோலமுடன் வருகுது

# பாண்ட்ஸ் கோல்டு க்ரீம்

## உமது சருமத்தை மென்மையாக்கிப் பாதுகாக்கும்

குளிர் நாட்களிலே வரண்டிடும் சரும மென்மையைக் குழைவுடனே உமக்கு மீட்டுத் தருவது பாண்ட்ஸ் கோல்டு க்ரீம்: உலகெங்குமே அரம்பையா விரும்பும் அழகுசாதனம் இயற்கை எவ்வாறு செயல்படுகிறதோ அதே முறையில்



உமது சருமத்தைப் பேணிக் காப்பது பாண்ட்ஸ் கோல்டு க்ரீம். வாடாமலரென மென்மையோடு மிளிரத் தேவைப்படும் சருமத் தைலங்களை மீட்டுத் தருகிறது பாண்ட்ஸ் கோல்டு க்ரீம். இட்டுப் பயனடைவீர் இன்றிரவே!

## உலகிலேயே உச்ச விற்பனை உடைய கோல்டு க்ரீம்: பாண்ட்ஸ்

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்க்., (வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் அமெரிக்காவிலே இணைக்கப்பட்டது.)

லின்டாஸ்- CPC. 2-140 TM.



# அலை ஓசை

அமரர் கல்கி

## 9. பட்டாபியின் புனர்ஜென்மம்

ரயில் தேவப்பட்டணம் ஸ்டேஷனை நெருங்கியபோது இரவு எட்டு மணி இருக்கும். ரயில் பாதையின் இரு பக்கமும் தேங்கியிருந்த மழைத் தண்ணீரில் ரயில் வண்டியின் விளக்குகள் வரிசையாகப் பிரதிபலித்தன. அவ்வாறே தேவப்பட்டணத்தை அடுத்துள்ள சாலைகளில் போட்டிருந்த விளக்குகளும் பக்கத்தில் கடல் போலத் தேங்கியிருந்த தண்ணீரில் வரிசையாகப் பிரதிபலித்து மினுமினுத்தன. வானை மூடியிருந்த மேகங்களினாலும் பூமியில் சூழ்ந்திருந்த அந்தகாரத்தினாலும் கருமை உருக்கொண்டிருந்த அந்த இரவு நேரத்தில் வரிசை வரிசையான மின்சாரத் தீபங்களும் தண்ணீரில் அவற்றின் பிரதிபிம்பங்களும் சேர்ந்து ஏதோ ஒரு மாயாபுரி வானத்திலிருந்து பூமியில் இறங்கியிருக்கிறது போன்ற பிரமையை உண்டாக்கின.

ரயில் ஸ்டேஷனுக்குள் சென்று நின்றதும், பட்டாபிராமன் முதலியவர்கள் ரயில் கதவைத் திறந்து கொண்டு கீழே இறங்கினார்கள். கதவைத் திறந்தவுடனேயே ஊதல் காற்று சுளீர் என்று அடித்தது. கீழே அவர்கள் இறங்கி நின்ற இடத்தில் பிளாட்பாரத்தின் மேற்கூரை இருந்தபோதிலும் திறந்திருந்த இரு பக்கங்களிலிருந்தும் மழைச் சாரல் வந்து தாக்கியது. போர்ட்டர்கள் குளிரில் நடுங்கிக் கொண்டே வந்து சாமான்களைத் தூக்கிக் கொண்டார்கள்.

அந்தச் சமயத்தில் ஸ்டேஷனுக்கு ஒரு பக்கத்திலேயிருந்து ஏராளமான ஜனங்கள் சொட்ட நனைந்த துணிகளுடன் கூச்சலிட்டுக் கொண்டு ஓடி வந்தார்கள். சிறிது நேரத்தில் நூற்றுக்கணக்கான ஸ்திரீகளும் புருஷர்களும் குழந்தைகளும் ரயில் பிளாட்பாரத்திலும் பிளாட்பாரத்துக்கு வெளியிலும் வந்து நிறைந்து விட்டார்கள். அவர்களுடைய துணியிலிருந்தும் உடம்பிலிருந்தும் சொட்டிய ஜலம் ரயில்வே ஸ்டேஷனை வெள்ளக்காடு ஆக்கியது.

முதலில் இவ்வளவு பேரும் ரயில் ஏற வருகிறார்களா என்ன என்று எண்ணிப் பட்டாபிராமன் ஆச்சரியப்பட்டான். ஆனால் ஈரத் துணிகளுடன் வந்தவர்கள் யாரும் அந்த ரயிலுக்குள் ஏறவில்லை. ரயிலும் போய் விட்டது.

அந்தக் கூட்டத்துக்குள் புகுந்து இடிபட்டுக் கொண்டு பட்டாபிராமனும் அவனுடைய குடும்பத்தாரும் வெளியேற வேண்டி நேர்ந்தது. ''இது என்ன கூட்டம்? இவ்வளவு பேரும் எந்த ரயிலில் ஏறுவதற்காக வந்திருக்கிறார்கள்?'' என்று பட்டாபிராமன் போர்ட்டரைக் கேட்டான்.

''இவர்கள் ரயில் ஏற வரவில்லை, ஸார்! இன்று சாயங்காலம் அடித்த புயலிலும் மழையிலும் இவர்களுடைய கூரைக் குச்சுகள் பிய்த்துக் கொண்டு போய் விட்டன. மழைக்குத் தங்க இடமில்லாமல் இங்கே வந்து குவிந்திருக்கிறார்கள். சனியன் பிடித்தவர்கள்!'' என்றான் போர்ட்டர்.

'' ஏன் அப்பா வீணாகத் திட்டுகிறாய்? ஏழை ஜனங்கள் வேறு எங்கே போவார்கள்?'' என்றாள் சீதா.

''எங்கேயாவது சத்திரம் சாவடி பார்த்துப் போய்த் தொலைகிறதுதானே? தங்க இடமில்லா விட்டால் ரயில்வே ஸ்டேஷன்தானா அகப்பட்டது? இன்

றைக்குச் சாயங்காலத்திலிருந்து இவர் களைத் துரத்தித் துரத்தி எனக்குக் கையும் அலுத்துவிட்டது; சத்தம் போட்டுப் போட்டு வாயும் வலிக் கிறது!'' என்றான் போர்ட்டர்.

கஷ்டப்பட்டு வாடகை வண்டிகள் பிடித்து ஏறிக் கொண்டு பட்டாபி ராமன் முதலியவர்கள் வீடு போய்ச் சேர்ந்தார்கள். வீடு சேர்ந்ததும் லலிதா சரசரவென்று வீட்டுக் காரியங்களைப் பார்க்கத் தொடங்கினாள். பட்டாபி ராமன் ஆபீஸ் அறைக்குள் சென்று வந் திருந்த கடிதங்களைப் பார்த்துவிட்டுப் பத்திரிகை படிக்கத் தொடங்கினான். குழந்தைகள் வேறு உலர்ந்த துணி உடுத்திக் கொண்டு சீக்கிரமாகச் சாப் பிட்டுவிட்டுத் தூங்குவதற்குச் சென் றார்கள்.

சீதா மட்டும் சோகமே உருக் கொண்டவளாக ஈரமான துணியைக் கூட மாற்றிக் கொள்ளாமல் ஒரு பக்கத் தில் உட்கார்ந்திருந்தாள்.

இலை போட்டானதும் லலிதா சாப் பிடக் கூப்பிடுவதற்காகக் கூடத்தில் வந்து பார்த்தாள்.

''இது என்ன, சீதா! ஈரத் துணி யைக்கூட மாற்றிக் கொள்ளாமல் உட் கார்ந்திருக்கிறாயே?'' என்று கேட்டாள்.

அதே சமயத்தில் பட்டாபிராமன் தன்னுடைய ஆபீஸ் அறைக்குள்ளே யிருந்து வெளியே வந்தான்.

''எனக்கென்னமோ அந்த ஏழை ஜனங்களின் நினைவாகவே இருக்கிறது. அவர்கள் எல்லோரும் — சின்னக் குழந் தைகள் உள்பட — ராத்திரியெல்லாம் ஈரத் துணியோடுதானே கழிக்கப் போகி றார்கள்? அவர்களை நினைத்தால் வேறு உலர்ந்த துணி உடுத்திக் கொள்ளவே மனம் வரவில்லை! இந்த மச்சு வீட்டில் கொஞ்சம்கூட நனையாமல் சௌகரிய மாக உட்கார்ந்திருப்பதே வேதனையாக இருக்கிறது!'' என்றாள் சீதா.

''அது பரிதாபமான விஷயந்தான். அதற்காக நாம் என்ன செய்வது? பத்துப் பேரா? இருபது பேரா? ஆயிரம் பேருக்கு மேலே இருக்கும். பொழுது விடிந்தபிறகு அவர்களுக்கு ஏதாவது செய்ய முடியுமா என்று பார்க்கலாம்!'' என்றான் பட்டாபி ராமன்.

''சாப்பிட்டுக் கொண்டே பேச லாம், வாருங்கள்!'' என்றாள் லலிதா.

''இன்று ராத்திரி அத்தனை ஜனங் களும் பட்டினி கிடக்கப் போகிறார்கள். பச்சைக் குழந்தைகள் பசி தாங்காமல் அழுவார்கள். அதை நினைத்துக் கொண் டால் நமக்கு எப்படிச் சாப்பிடுவதற்கு மனம் வரும்?'' என்றாள் சீதா.

''ஆகையால் அதை நினைத்துப் பார்க்கவே கூடாது. உலகத்திலுள்ள கஷ்டங்களை யெல்லாம் நினைத்துப் பார்த்துக் கொண்டிருந்தால் நமக்கு மன நிம்மதி இராதுதான்!'' என்றான் பட்டாபிராமன்.

''நம்முடைய கவலையை நாம் பட் டால் போதாதா? ஊர்க் கவலையை எல்லாம் எதற்காக விலைக்கு வாங்க வேண்டும்?'' என்றாள் லலிதா.

''சில பேரால் அப்படிச் சொந்தக் காரியத்தைக் கவனிப்பதோடு இருக்க முடிகிறது. என்னால் அப்படி இருக்க முடியவில்லையே!'' என்றாள் சீதா.

''எனக்குப் பட்டுவும், பாலுவும் சாரலில் நனைந்ததைப் பற்றியே நினை வாக இருக்கிறது. ஜலதோஷம் பிடித் துக் கொள்ளாமலிருக்க வேண்டுமே என்று கவலையா யிருக்கிறது!'' என்று லலிதா சொன்னாள்.

''ரயில்வே ஸ்டேஷனில் இந்தக் குழந்தைகள் மாதிரி எத்தனை குழந்தை களைப் பார்த்தோம்! அவ்வளவு பேரும் இன்று ராத்திரியெல்லாம் மழையிலும் சாரலிலும் கிடக்கப் போகிறார்கள். அவர்களுக்கெல்லாம் உடம்புக்கு வந் தால் யார் கவனிப்பார்கள்?'' என்றாள் சீதா.



''நானும் அதைப் பற்றி யோசித்துக் கொண்டுதான் இருக்கிறேன். பொழுது விடியட்டும்; என்னுடைய சிநேகிதர்களுடன் கலந்து யோசித்து ஏதாவது ஏற்பாடு செய்யலாம். இப்போது உலர்ந்த துணி உடுத்திக் கொண்டு சாப்பிடலாம், வாருங்கள்! நம்முடைய உடம்பைப் பாதுகாத்துக் கொண்டால்தானே மற்றவர்களுக்கு நம்மால் உதவி செய்ய முடியும்?'' என்ருன் பட்டாபிராமன்.

இதைக் கேட்ட சீதா எழுந்து சாப்பிடச் சென்ருள். சாப்பிட்டபிறகு மூன்று பேரும் கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டுப் படுக்கச் சென்ருர்கள்.

லலிதா படுத்துக் கொண்ட உடனே கம்பளியை இழுத்துப் போர்த்திக் கொண்டு நிம்மதியாகத் தூங்கத் தொடங்கினுள்.

சீதாவுக்கு ரயில்வே ஸ்டேஷனில் பார்த்த ஏழை ஜனங்களே நினைத்து நினைத்து இரவெல்லாம் தூக்கம் வரவில்லை.

பட்டாபிராமனுக்கோ சீதாவின் தயாள குணத்தை எண்ணி எண்ணித் தூக்கம் வரவில்லை.

மறுநாள் பொழுது விடிந்ததும் பட்டாபிராமன் சீதாவிடம் சொன்ன வார்த்தையை நிறைவேற்ற எண்ணி வெளியே சென்ருன். எத்தனை ஏழைக் குடும்பங்களின் குடிசைகள் விழுந்து விட்டன. எத்தனை பேர் தங்க இடமின்றியும் உண்ண உணவின்றியும் தவிக்கிருர்கள் என்பதை யெல்லாம் விசாரித்துத் தெரிந்து கொண்டான். சில சிநேகிதர்களோடு கலந்து பேசி வெள்ளக் கஷ்ட நிவாரண வேலை தொடங்குவதற்கு வேண்டிய ஏற்பாடு செய்தான். மத்தியானம் வீட்டுக்குத் திரும்பி வந்து சீதாவிடம் எல்லா விவரங்களேயும் கூறினன்.

''கல்கத்தாவில் இந்தமாதிரி கஷ்ட நிவாரண வேலையில் எனக்குக் கொஞ்சம் அனுபவம் உண்டு. நானும் உங்களுடன் வந்து ஸ்திரீகளுக்கும் குழந்தைகளுக்கும் என்னுல் இயன்ற உதவி செய்கிறேனே! வீட்டில் வெறுமனே உட்கார்ந்திருக்கப் பிடிக்கவே யில்லை!'' என்ருள் சீதா.

பட்டாபிராமன் மிக்க சந்தோஷத்துடன் அதை ஒப்புக் கொண்டான். ''இந்த ஊரில் அம்மாதிரி சேவை செய்யக்கூடிய இன்னும் சில சகோதரிகளும் இருக்கிருர்கள்! அவர்களுடன் உன்னைச் சேர்த்துவிடுகிறேன்'' என்று சொன்னுன்.

அன்று மத்தியானமே பட்டாபிராமன் ஒருபக்கத்திலும் சீதா இன்னெரு பக்கத்திலும் வெள்ளக் கஷ்ட நிவாரண வேலையில் ஈடுபட்டார்கள்.

முதலில் சில நாட்கள் வரையில் குடிசைகளை இழந்த ஏழை ஜனங்களுக்குப் பள்ளிக்கூடங்களில் தங்க இடம்



கொடுக்கப்பட்டது. அவ்வளவு பேருக்கும் சமையல் செய்து சாப்பாடு போட வேண்டியிருந்தது. நோய்ப்பட்டவர்களுக்கு மருந்து கொடுத்துச் சிகிச்சை செய்ய வேண்டி யிருந்தது. குழந்தைகளுக்கு நோய் நொடி வராமல் சர்வ ஜாக்கிரதையுடன் பார்த்துக் கொள்ள வேண்டியிருந்தது.

மழை நின்று தரை காய்ந்த பிறகு அவர்களுக்கெல்லாம் புதிதாகக் குடிசைகள் கட்டிக் கொள்ள வசதி செய்து கொடுக்க வேண்டி வந்தது.

நிவாரண வேலை முடிவடைவதற்கு மூன்று மாதம் பிடித்தது. இந்த மூன்று மாத காலமும் பட்டாபிராமனுக்கும் சீதாவுக்கும் ஓயாத ஒழியாத வேலை இருந்து வந்தது. அவர்களுடன் அந்த ஊர்க்காரர்கள் இன்னும் பலர் ஒத்துழைத்தார்கள். சீதாவின் ஊக்கமும் உழைப்பும் இனிய சுபாவமும் மதுரமான மொழிகளும் அனைவருக்கும் உற்சாகத்தை ஊட்டி வந்தன. தேவப்பட்டணமெங்கும் சீதாவின் புகழ் பரவி வந்தது.

பட்டாபிராமன் சிறையிலிருந்து வந்தது முதல் உற்சாகம் குன்றியிருந்தான். தேசத்துக்குச் சுதந்திரமோ வந்தபாடில்லை. நாட்டில் தேசிய ஊக்கம் என்பதே கிடையாது. பழையபடி கோர்ட்டுக்குப் போய் வக்கீல் தொழில் செய்யப் பிடிக்கவில்லை. மேலும், கட்சிக்காரர்களுக்கு எங்கே போவது? செய்வதற்கு வேறு வேலையும் இல்லை.

இதனாலெல்லாம் மனச் சோர்வு அடைந்திருந்தவன் இப்போது புனர் ஜென்மம் எடுத்தவன் போல் ஆனான். வெள்ளக் கஷ்ட நிவாரணத்தில் அவனுக்கு வேலை நிறைய இருந்தது. அந்த வேலை அவனுக்கு மிகவும் பிடித்தமாகவும் இருந்தது. மாலையில் வீடு திரும்பியதும் அன்றன்று நடந்த வேலைகளைப் பற்றிப் பட்டாபியும் சீதாவும் உற்சாகமாகப் பேசிக் கொள்வார்கள். வீட்டில் பொதுவாகக் கலகலப்பு அதிகமாயிற்று. இது லலிதாவுக்கு மிகவும் சந்தோஷமாயிருந்தது.

"இந்த வீடு இம்மாதிரி முன்னெப்போதும் கலகலப்பாயிருந்ததில்லை, சீதா! இவரும் இவ்வளவு குதூகலமாயிருந்ததில்லை. உன்னை இவருக்கு ரொம்பவும் பிடித்துப் போயிருக்கிறது. யாருக்குத்தான் உன்னைப் பிடிக்காமலிருக்கும்; நீ இங்கேயே எப்போதும் இருந்துவிடு, சீதா!" என்று லலிதா அடிக்கடி சொல்லுவாள்.

"கடவுளுடைய சித்தமும் அப்படித்தான் இருக்கும் போலிருக்கிறது. எனக்குப் போக்கிடம் எங்கே?" என்று சொல்வாள் சீதா.

"உன் குழந்தை வஸந்தியை நீ மதராஸில் விட்டு வைத்திருப்பது மட்டும் எனக்குப் பிடிக்கவில்லை. நாலு பேர் நாலு சொல்லுவதற்கு ஏன் இடம் வைத்துக் கொள்ள வேண்டும்? குழந்தையையும் இவ்விடத்துக்கு அழைத்துக் கொண்டு வந்துவிடு! இரண்டு குழந்தையோடு மூன்றாவது குழந்தையாக இருந்து விட்டுப் போகிறாள்!" என்று லலிதா கூறுவாள்.

"இந்தக் கோடைக்குப் பள்ளிக்கூடம் சாத்தியதும் வஸந்தியை அழைத்து வந்து விடலாம் என்றுதான் எண்ணிக் கொண்டிருக்கிறேன்" என்று சீதா பதில் கூறுவாள்.

நாள் செல்லச் செல்ல, அந்த வீட்டில் லலிதாவின் செல்வாக்கு குன்றிச் சீதாவின் செல்வாக்கு அதிகமாகிக் கொண்டு வந்தது.

பட்டுவும் பாலுவும் அம்மாவின் வார்த்தையைக் காட்டிலும் அத்தையின் வார்த்தைக்கு அதிக மதிப்புக் கொடுக்கத் தொடங்கினார்கள். அரை நாழிகை நேரம் அம்மா சாப்பிடக் கூப்பிட்டாலும் அவர்கள் வரமாட்டார்கள். ஆனால் அத்தை ஒரு தடவை கூப்பிட்டால் ஓடி வந்து விடுவார்கள்.

வேலைக்காரர்கள் வீட்டு அம்மாளைக் காட்டிலும் டில்லி அம்மாளுக்கு அதிக மரியாதை காட்டத் தொடங்கினார்கள். லலிதா ஏதாவது ஒரு காரியத்தை இந்த மாதிரி செய்ய வேண்டும் என்று சொன்னால், "டில்லி அம்மா அப்படிச் செய்யச் சொல்லி யிருக்கிறார்களே!" என்று வேலைக்காரர்கள் கூசாமல் பதில் சொல்வார்கள்.

சுண்டு, லலிதா சொல்லுகிற காரியத்தை எந்த நாளும் செய்ததில்லை; இப்போதும் அவள் பேச்சை ஒரு பொருட்டாக மதிக்க மாட்டான். ஆனால் சீதா அவனிடம் ஏதாவது செய்யும்படி சொல்லிவிட வேண்டியதுதான்; அடுத்த நிமிஷமே விழுந்தடித்து ஓடிச் சென்று அந்தக் காரியத்தைச் செய்து விட்டு வருவான். 'எள்ளு' என்று சொன்னால், 'எண்ணெய்' கொண்டு வந்து விடுவான்!

இதெல்லாம் லலிதாவுக்குத் திருப்தியாகவே இருந்து வந்தது. தன்னுடைய அத்யந்த அன்புக்குரிய தோழிக்கு இப்படி எல்லாரும் மரியாதை செய்வது அவளுக்கு மகிழ்ச்சி தந்தது. "அத்தங்கா! உன்னிடம் என்னதான் சொக்குப்பொடி இருக்கிறதோ? இப்படி எல்லாரும் மயங்கிப்போய் விடுகிறார்களே?" என்று லலிதா சொல்லி வந்தாள்.

# 10. எலெக்ஷன் சனியன்

வெள்ளக் கஷ்டத்தில் அகப்பட்ட ஏழைகளுக்கு முடிவில் அதனால் நன்மை ஏற்பட்டது. வயோதிகர், குழந்தைகள் ஆண்கள், பெண்கள் அனைவருக்கும் இரண்டு இரண்டு புதுத் துணிகள் உடுத்திக்கொள்ளக் கிடைத்தன. சுத்தமான இடத்தில் சுத்தமான முறையில் கட்டிய புதிய குடிசைகள் கிடைத்தன. ஊருக்கு நடுவே ஒரு சிறு பிள்ளையார் கோயிலும் கட்டிக் கொடுக்கப்பட்டது. பிள்ளையார் கோவிலுக்கு முன்னால் பிரதி சனிக்கிழமைதோறும் பஜனை நடந்தது.

இவ்வாறு வெள்ளக் கஷ்டத்துக்கு ஆளானவர்களின் பாடு கொண்டாட்டமாயிற்று. ஆனால் கஷ்ட நிவாரண வேலை செய்தவர்களின் பாடு திண்டாட்டமாயிற்று. செய்வதற்கு வேலை ஒன்றும் இல்லாமற் போகவே பட்டாபிராமன் மறுபடியும் மனச் சோர்வு அடைந்தான். சீதா சிமைக்குச் சென்ற கணவனைப் பற்றியும் மதராசில் உள்ள குழந்தையைப் பற்றியும் எண்ணி எண்ணி உருகினாள். வீட்டில் கலகலப்புக் குறைந்தது; எல்லோருடைய முகமும் களை இழந்தது.

ஒரு நாள் மாலை சில நண்பர்கள் பட்டாபிராமனைத் தேடிக் கொண்டு வந்தார்கள். அந்த ஊரில் நகரசபைத் தேர்தல் வருகிறதென்றும், அதற்குப் பட்டாபிராமன் நிற்க வேண்டும் என்றும் அவர்கள் சொன்னார்கள். தேர்தலில் நின்று ஜெயித்தால் சேர்மன் பதவி கிடைப்பதற்கும் 'சான்ஸ்' இருக்கிறது என்று ஆசை காட்டினார்கள்.

பட்டாபிராமனுக்கு இந்த யோசனை அவ்வளவாகப் பிடிக்கவில்லை. ஏற்கெனவே ஒரு தடவை தன் தந்தை இன்னொருவருக்காகத் தேர்தலில் தலையிட்டதினால் நேர்ந்த விளைவுகள் அவனுக்கு எச்சரிக்கையாக இருந்தன. ஆனாலும் அடியோடு அவன் மறுத்துச் சொல்லவில்லை. சிறை சென்று வந்த தியாகியாகிய அவனை யாரும் எதிர்த்து நிற்க மாட்டார்கள் என்று நண்பர்கள் கூறினார்கள். அது மட்டுமல்லாமல், சமீபத்தில் ஏற்பட்ட வெள்ள விபத்தின்போது அவன் ஏழை ஜனங்களுக்குச் செய்த சேவையைத் தேவப்பட்டணமே பார்த்துப் பிரமித்துப் போயிருப்பதாகவும், யாராவது அவனை எதிர்த்து நிற்கத் துணிந்தால் அத்தகைய எதிரிக்குத் தேவப்பட்டணம் நல்ல பாடம் கற்பிக்கும் என்றும், பட்டாபிராமன் வெற்றி அடைவது சர்வ நிச்சயம் என்றும் அந்த நண்பர்கள் சொன்னார்கள். அவர்களுக்குப் பட்டாபிராமன், ''யோசித்துச் சொல்லுகிறேன்'' என்று பதில் அளித்தான்.

அன்றிரவு சாப்பிடும்போது லலிதா, ''யாராரோ வந்து என்னென்னமோ சொல்லிக் கொண்டிருந்தார்களே? என்ன சொல்லிக் கொண்டிருந்தார்கள்?'' என்று கேட்டாள்.

''முனிசிபல் எலெக்ஷனுக்கு நிற்கும்படி சொன்னார்கள்! உன் அபிப்பிராயம் என்ன?'' என்று பட்டாபிராமன் லலிதாவைக் கேட்டுவிட்டுச் சீதாவின் முகத்தைப் பார்த்தான்.

லலிதா, ''எலெக்ஷனும் வேண்டாம்; ஒன்றும் வேண்டாம். ஊரில் இருப்பவர்களுக்கு வேறு வேலை இல்லையாக்கும்? ஏமாந்தவர் யார் என்று தேடி வந்தார்களாக்கும்?'' என்றாள்.

''சட்டென்று அப்படி ஏன் சொல்கிறாய், லலிதா! வந்தவர்கள் எல்லாரும் உன் அகத்துக்காரரின் சிநேகிதர்கள் தானே? அவர்கள் வேண்டுமென்று கெடுதலான காரியத்தைச் சொல்லுவார்களா?'' என்று சீதா கேட்டாள்.

''உனக்கு இந்த ஊர் சமாசாரம் தெரியாது, அத்தங்கா! முன்னே ஒரு தடவை இவருடைய அப்பா யாரோ ஒருவருக்காக எலெக்ஷனில் வேலை செய்தார். அதனால் எங்களுக்கும் எதிர் வீட்டுக்காரர்களுக்கும் பேச்சு வார்த்தையே இல்லாமல் போயிற்று. பல வருஷங்கள் கழித்துச் சூரியா வந்து சண்டையைத் தீர்த்து வைத்தான்! உனக்குக்கூட நான் எழுதியிருந்தேனே?''

''அப்போது நடந்ததற்கும் இப்போது நடப்பதற்கும் எவ்வளவோ வித்தியாசம்! இவருடைய அப்பா தேசத்துக்காக எதுவும் செய்யவில்லை. இவர் இரண்டரை வருஷம் சிறையில் இருந்துவிட்டு வந்திருக்கிறார். இவர் எலெக்ஷனுக்கு நின்றால் யார் எதிர்த்து நிற்க முடியும்? எதிர்த்து நிற்கிறவர்கள் அதோகதி அடைய வேண்டியதுதான்!'' என்று சீதா கூறினாள்.

''நீங்கள் நினைப்பதுபோல் அவ்வளவு சுலபமான காரியமில்லை. கள்ள மார்க்கெட்டில் ஏராளமான பணம் பண்ணிய ஆசாமி ஒருவர் இந்த வார்டில் நிற்கப் போவதாகக் கேள்விப்படுகிறேன். போட்டி பலமாக இருக்கும்!'' என்றான் பட்டாபிராமன்.

''எவ்வளவு பலமாக இருந்தாலும் சரிதான்! அதற்காகப் பயந்துவிடுவதா என்ன? நீங்கள் மட்டும் தேர்தலுக்கு நின்றால், நான் வீடு வீடாகப் போய் வோட்டுக் கேட்கத் தயார்!'' என்றாள் சீதா.

''நீங்கள் அவ்வளவு ஊக்கமாக வேலை செய்வதாயிருந்தால் நானும் நிற்கத் தயார்!'' என்று சொன்னான் பட்டாபி ராமன்.

''அப்படி உற்சாகமாகச் சொல் லுங்கள்! நாளைக்கே வேலை ஆரம்பித்து விடலாம்!'' என்றாள் சீதா.

''எல்லாவற்றுக்கும் கொஞ்சம் யோசித்துச் செய்யலாம் என்று எனக் குத் தோன்றுகிறது. எதிர்த்த வீட்டுக் காரரிடம் யோசனை கேளுங்களேன். நமக்கு வேண்டியவர்களில் வயதானவர், சரியான யோசனை சொல்லக் கூடியவர், தாமோதரம் பிள்ளைதானே?'' என்று லலிதா சொன்னாள்.

''எதிர்த்த வீட்டுக்காரரைப் போய்க் கேட்பதென்ன? அவர்தான் ஜஸ்டிஸ் கட்சிக்காரர் என்பது தெரியுமே? எலெக் ஷனுக்கு நிற்க வேண்டாம்' என்றுதான் அவர் சொல்வார்!'' என்றாள் சீதா.

''எலெக்ஷனுக்கு நின்றால் ரொம்பப் பணச் செலவு ஆகும். நமக்கு இப் போது வருமானமும் இல்லையே?'' என் றாள் லலிதா.

''பணம், பணம் என்று அடித்துக் கொள்வது எனக்குப் பிடிப்பதே இல்லை. பணத்தைத் தலையில் கட்டிக் கொண்டா போகப் போகிறோம்? அப்படியொன்றும் பணச் செலவும் அதிகமாக ஆகிவிடாது. ஆகிற செலவுக்கு நான் என் கழுத்துச் சங்கிலியை விற்றுக் கொடுக்கிறேன்!'' என்று சீதா ஆவேசமாகக் கூறினாள்.

'' நீ ஒன்றும் கழுத்துச் சங்கிலியை விற்றுக் கொடுக்க வேண்டாம். அப்படி நாங்கள் கதியற்றுப் போய்விடவில்லை!'' என்றாள் லலிதா.

''போதும் போதும்; நிறுத்து இந்த உதவாக்கரைப் பேச்சை!'' என்று பட்டாபிராமன் கடுகடுப்புடன் லலிதா வைப் பார்த்துச் சொன்னான்.

''யார் என்ன சொன்னாலும், நீங்கள் எலெக்ஷனுக்கு நிற்கிறது எனக்குக் கொஞ்சங்கூடப் பிடித்தமில்லை!'' என் றாள் லலிதா.

'' உனக்கு நான் செய்கிற காரியம் எதுதான் பிடித்தமா யிருந்தது? நான் 1942-ல் சட்டமறுப்புச் செய்த போதும் நீ 'வேண்டாம்' என்றுதான் சொன் னாய். உன்னுடைய யோசனையைக் கேட் டால் உருப்பட்டாற்போலத்தான்!'' என்றான் பட்டாபிராமன்.

லலிதாவின் கண்களில் கண்ணீர் ததும்பிற்று. அதைக் காட்டிக் கொள்ள அவளுக்கு வெட்கமா யிருந்தது. வேறு பக்கம் திரும்பிக் கண்ணீரைத் துடைத் துக் கொண்டாள்.

சமையல்காரியோ அல்லது வேறு வேலைக்காரர்களோ இருக்கும்போது தன் கணவருடன் எந்த விஷயத்தைப் பற்றியும் வாக்குவாதம் தொடங்கக் கூடாது என்று அவள் மனம் சங்கல்பம் செய்து கொண்டது. வேலைக்காரர்கள் முன்னால் மட்டும் என்ன? சீதா இருக் கும் போதுகூட எந்த விஷயத்தைப் பற்றியும் இனிமேல் விவாதம் செய்யக் கூடாதுதான்! என்ன அவமானம்! என்ன மானக்கேடு!

மறு நாள் பட்டாபிராமன் எதிர் வீட்டுக்குப் போய்த் தாமோதரம்பிள்ளை யிடம் தான் எலெக்ஷனுக்கு நிற்கத் தீர்மானித்திருப்பதாகவும் அவருடைய ஆசீர்வாதம் வேண்டும் என்றும் தெரியப்படுத்தினான்.

''என்னுடைய ஆசீர்வாதம் வேண் டிய மட்டும் தருகிறேன், தம்பி! ஆனால் இந்த அருமையான யோசனையை உனக்கு யார் சொன்னது?'' என்று தாமோதரம்பிள்ளை கேட்டார்.

''எல்லாச் சிநேகிதர்களும் ஒருமிக்க வந்து சொன்னார்கள்; எனக்கும் அது சரி என்று தோன்றித்தான் நிற்கிறேன்'' என்றான் பட்டாபி.

''அதிலுள்ள லாப நஷ்டங்களைப் பற்றி யோசித்தாயா? பணச் செலவு ரொம்ப ஆகுமே! அதோடு வீண் விரோ தங்கள் ஏற்படும். இப்போது உனக்கு ஊரில் ரொம்ப நல்ல பெயர் இருக்கிறது. அதை ஏன் கெடுத்துக் கொள்கிறாய்?'' என்றார் தாமோதரம் பிள்ளை.

'' நல்ல பெயர் எதற்காகக் கெடு கிறது? தேசத் தொண்டில் இறங்கிய பிறகு அதையெல்லாம் பார்த்தால் சரிப் படுமா? நான் சிறைக்குப் போவதற்கே பயப்படவில்லையே? மற்றதற்கெல்லாம் பயப்பட்டு விடுவேனா?'' என்றான் பட்டாபிராமன்.

''சிறைக்குப் போவது வேறு விஷயம், தம்பி! அதனால் யாருக்கும் கஷ்டமோ நஷ்டமோ இல்லை. ஆனால் எலெக்ஷன் விஷயம் அப்படியல்ல. பல பேருடைய துவேஷத்துக்கு ஆளாகும்படி நேரிடும்.''

''எது எப்படியானாலும் நான் தேர்தலுக்கு நிற்பது என்று நிர் மானித்துச் சிநேகிதர்களிடம் சொல்லி யும் விட்டேன். இனிப் பின்வாங்குவ தற்கில்லை!'' என்றான் பட்டாபிராமன்.

''அப்படியானால் சரி; உனக்கு வெற்றி கிடைக்கக்கூடும். அதற்கு என்னாலான உதவியும் செய்கிறேன். உன் தகப்ப னாரையும் சூரியாவையும் உத்தேசித்து உனக்கு நான் உதவி செய்யத்தான் வேண்டும். ஆனால் ஒரு விஷயம், தம்பி! அந்தப் புது டில்லிப் பெண் சீதா எப் போது ஊருக்குப் போகப் போகிறாள்? சீக்கிரத்தில் அவளை அனுப்பிவிடுவது நல்லது!'' என்றார் தாமோதரம்பிள்ளை.

''இதென்ன திடீரென்று இப்படிச் சொல்கிறீர்கள்? சீதாவைப் பற்றி நீங்கள் அடிக்கடி புகழ்ந்து பாராட்டுவது வழக்கம் ஆயிற்றே?''

''நல்ல காரியம் செய்து கொண்டிருந்த வரையில் புகழ்ந்து பாராட்டினேன். இந்தக் காரியத்தில் உன்னைத் தூண்டி விட்டிருப்பது நல்ல காரியம் என்று எனக்குத் தோன்றவில்லை!''

''பிள்ளைவாள்! சீதாவுக்கும் என்னுடைய தீர்மானத்துக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை! அவள் என்னைத் தூண்டிவிடவும் இல்லை! எனக்குச் சுய புத்தி இல்லையா, என்ன?'' என்றான் பட்டாபிராமன்.

* * *

நகரசபைத் தேர்தலுக்கு நிற்பதாகப் பட்டாபிராமன் தெரிவித்த நாளிலிருந்து அந்த வீட்டில் வருவோர் போவோரின் கூட்டமும் கூச்சலும் அதிகமாயின. பகல் என்றும் இரவென்றும் இல்லாமல் தேர்தலுக்கு வேலை செய்யும் சிநேகிதர்களும் தொண்டர்களும் எந்த நேரத்திலும் வந்து கொண்டிருந்தார்கள். அவர்களில் பலர் பட்டாபியின் வீட்டிலேயே காப்பி, சிற்றுண்டி, சாப்பாடு முதலியவை வைத்துக் கொண்டார்கள். வெற்றிலை கவுளி கவுளியாகவும் புகையிலை கத்தை கத்தையாகவும் செலவாயின. பணம் நோட்டு நோட்டாகச் செலவாகி வந்தது. சீட்டுக் கட்டு தினம் ஒன்று வாங்கப்பட்டது. வீட்டில் ஒரு வருஷத்துக்குச் சேகரித்து வைத்திருந்த உணவுப் பண்டங்கள் எல்லாம் ஒரு மாதத்தில் தீர்ந்து போயின.

லலிதாவுக்கு இது ஒன்றும் பிடிக்கவில்லை. அவளுடைய வருத்தத்தை அதிகப்படுத்துவதற்கு இன்னும் சில நிகழ்ச்சிகளும் சேர்ந்து கொண்டன. சீதாவின் ஆடம்பரமும் அதிகார தோரணையும் நாளுக்கு நாள் அதிகமாக வளர்ந்தன. பெண்மைக்குரிய அடக்கம் வர வரக் குறைந்து வந்தது. தேர்தல் வேலைக்கு என்று வருகிற புருஷர்களோடு சரிசமமாக உட்கார்ந்து கொண்டு இரைந்து பேசுவதும் வாதாடுவதும், 'ஹா ஹா ஹா' என்று கைதட்டிச் சிரிப்பதும் வழக்கமாகிக் கொண்டு வந்தன. சீதாவின் நல்ல குணங்களைப் பற்றி ஏற்கனவே ரொம்பவும் புகழ்ந்து பேசிய அக்கம்பக்கத்து வீட்டுக்காரர்கள் இப்போது அவளைப் பற்றிக் குறைவாகப் பேசத் தொடங்கினார்கள். பட்டாபிராமனைப் பற்றியும் எகத்தாளமாகப் பேச ஆரம்பித்திருந்தார்கள். இந்தப் பேச்சு லலிதாவின் காதுக்கு எட்டி அவளுக்கு மிக்க மன வேதனையை உண்டுபண்ணி வந்தது.

ஒரு நாள் வாசல் பக்கத்துக் காமிரா உள்ளில் பட்டாபிராமனும் அவ

## 'சுந்தா'வின் வேண்டுகோள்



அமரர் கல்கியின் வாழ்க்கை வரலாற்றை எழுதும் பணியில் ஈடுபட்டுள்ள சுந்தா விடுக்கும் கோரிக்கை:

1. கல்கியின் கட்டுரைத் தொகுப்பு, ''ஏட்டிக்குப் போட்டி''. 1932ல் ஆசிரியரின் படத்துடன் வெளியான முதற் பதிப்பு.

2. ரா. கி. அல்லது ரா. கிருஷ்ணமூர்த்தி என்ற பெயரிலோ அல்லது பெயர் ஏதும் இல்லாமலோ 1930ல் பெங்களூரில் அச்சாகி, தமிழ் மாவட்டங்களில் காலணா விலைக்கு விற்பனையான பிரசாரப் பிரசுரங்கள். அவற்றின் தலைப்புக்களாவன: மகாத்மா சிறைவாசம்; மகாத்மா சரித்திரம்; சுதந்திரப் போர்; சுயராஜ்யம் ஏன்?

3. வ. ரா.வை ஆசிரியராகக் கொண்டு புதுச்சேரியிலிருந்து வெளியான ''சுதந்திரன்'' என்ற பத்திரிகையில் 1923ம் ஆண்டு இதழ்களில் வந்த ''விமலா'' என்ற ரா. கி.யின் தொடர்கதை.

4. திரு வி. க.வின் ''நவசக்தி''யில் 1924க்கும் 1928க்கும் இடையே ''தும்பி'' என்ற புனைபெயரில் வெளியான கட்டுரைகள் அல்லது குறிப்புக்கள்.

இவற்றை நேயர்கள் தம் வசமிருந்தோ, கிடைக்கக்கூடிய இடங்களில் தேடியோ, அடியிற் காணும் முகவரிக்கு அனுப்பித் தந்தால் பெரிதும் உதவியாய் இருக்கும். முழுமையாக இல்லாமல் சில பகுதிகள் மட்டுமே இருந்தாலும் அனுப்பி வைக்கலாம்.

எம். ஆர். எம். சுந்தரம் (சுந்தா)
14 (கோட்டை வீடு),
பிஞ்சால சுப்பிரமணியம் தெரு
சென்னை—600017.




னுடைய எலெக்‌ஷன் தோழர்களும் சீதாவும் உட்கார்ந்து அட்டகாசமாகப் பேசிச் சத்தம் போட்டுச் சிரித்துக் கொண்டிருந்தார்கள். இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த லலிதாவின் மனத்தில் ஆத்திரம் பொங்கிக் கொண்டிருந்தது. வந்திருந்தவர்கள் எப்போது போய்த் தொலைவார்கள் என்று காத்திருந்தாள். அவர்கள் போனதும் சீதாவும் உள்ளே வந்து மச்சுப்படி ஏறித் தனது அறைக்குச் சென்றாள். பிறகு பட்டாபிராமன் வந்தான். லலிதாவைப் பார்த்து, ''சமையல் ஆகி விட்டதா? சீக்கிரம் கிளம்ப வேணும்'' என்றான்.

''நன்றாகச் சீக்கிரம் கிளம்பினீர்கள்! சீக்கிரம் கிளம்பி என்ன கோட்டை கட்டப் போகிறீர்களோ, தெரியவில்லை. இந்த எலெக்‌ஷன் சனியன் உங்களை நன்றாகப் பிடித்துக் கொண்டு ஆட்டுகிறது'' என்றாள் லலிதா.

''என்ன 'உளறுகிறாய்? வாயை மூடு! ஷட் அப்!'' என்று பட்டாபிராமன் உரத்துக் கத்தினான்.

''நான் ஒன்றும் உளறவில்லை. உள்ளதைத்தான் சொல்லுகிறேன். எலெக்‌ஷன் சனியன் மட்டுமா? சீதா சனியனும் உங்களைப் பிடித்துக் கொண்டிருக்கிறது!'' என்றாள் லலிதா ஆத்திரமாக.

பட்டாபிராமன் ரௌத்ராகாரம் அடைந்தான். அவனுடைய முகம் விகாரப்பட்டது.

''என்ன சொன்னாய்? ஜாக்கிரதை! வாயைத் திறந்தாயோ, கொன்றுவிடுவேன்!'' என்று பதறிக் கொண்டே சொன்னான்.

''ஆமாம்; அப்படியே கொன்றுவிடுங்கள்! உங்கள் மகாத்மா காந்தி இதைத்தானே சொல்லிக் கொடுத்திருக்கிறார்?''

பட்டாபியின் பதற்றம் கொஞ்சம் அடங்கியது. தக்க பதில் சொல்வதற்குச் சிறிது யோசித்தான்.

அதற்குள் லலிதா, ''இந்த மிரட்டல் எல்லாம் வேண்டாம். நான் சொல்லுவதைக் கொஞ்சம் கேளுங்கள். இந்த எலெக்‌ஷன் சங்கடத்தை விட்டுத் தொலையுங்கள். அதை விட்டுத் தொலைக்க முடியாவிட்டால் சீதாவை யாவது இந்த வேலைக்குக் கூப்பிட வேண்டாம். ஊர் சிரிக்கிறது. என் மானம் போகிறது!'' என்றாள்.

''மானம் போகட்டும்; தாராளமாகப் போகட்டும். நானும் எலெக்‌ஷனை விடுவதாகவும் உத்தேசமில்லை; சீதாவுக்குத் தடை உத்தரவு போடப் போவதுமில்லை. இதிலெல்லாம் நீ தலையிட வேண்டாம். உன் வேலையைப் பார்!'' என்றான் பட்டாபிராமன்.

''நான் தலையிடாமல் வேறு யார் தலையிடுவது? நீங்கள் இவ்விதம் சொன்னால் சீதாவை நான் ஊருக்குப் போகச் சொல்லிவிடுகிறேன்!'' என்றாள் லலிதா.

''சீதாவை ஊருக்குப் போகச் சொல்ல நீ யார்? உனக்கு என்ன அதிகாரம்?'' என்று பட்டாபிராமன் கர்ஜித்தான்.

''பின்னே யாருக்கு அதிகாரம்? என்னுடைய அத்தங்கா சீதாவை நான் அழைத்துக் கொண்டு வந்தேன்; நான் போகச் சொல்கிறேன்.''

''சீதா இந்த வீட்டிலிருந்து போக மாட்டாள். யாராவது போகிறதாயிருந்தால் நீதான் போக வேண்டும்!''

''என்னுடைய வீட்டிலிருந்து நான் ஏன் போகிறேன்? எங்கிருந்தோ வந்த நாயை வீட்டிலே வைத்துவிட்டு....''

பட்டாபிராமனுக்கு மறுபடியும் ரௌத்ராகாரம் வந்துவிட்டது. ''என்னடி சொன்னாய்? யாரடி நாய்?'' என்று கேட்டுக் கொண்டே அவன் லலிதாவின் அருகில் வந்தான். ''இதோ இந்த நிமிஷமே உன்னை இந்த வீட்டை விட்டுத் துரத்திவிட்டு மறு காரியம் பார்க்கிறேன்! திமிர் பிடித்த கழுதை!'' என்று சொல்லிக் கொண்டே லலிதாவின் கழுத்தில் கையைப் போட்டு வெளி வாசற்படியை நோக்கித் தள்ளத் தொடங்கினான்.

லலிதா, ''ஐயோ! ஐயோ!'' என்று அலறினாள்.

அதைக் கேட்டுவிட்டு வந்தவனைப் போல் சூரியா அச்சமயம் உள்ளே நுழைந்தான்.

சூரியா வந்ததைப் பார்த்துவிட்டுப் பட்டாபிராமனும் லலிதாவும் பிரமித்துப் போய் நின்றார்கள்.

மேல் மச்சுப் படியில் நின்றுகொண்டு சீதா இந்த நாடகத்தையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தாள். அவளுடைய உள்ளத்தின் கொந்தளிப்பை முகத் தோற்றம் காட்டியது. (தொடரும்)

பரிசுத்தமான பாலினுல் செய்யப்பட்டது



காட்பரிஸ் சாக்கலேட்

சுவையானது
மட்டுமல்ல...
போஷாக்கு
அளிக்கவும் வல்லது!




பரிசுத்தமான பால்,
சத்துள்ள கோகோ,
இவையுடன் சர்க்கரையின்
இனிப்பு — அதுவே
காட்பரிஸ் மில்க் சாக்கலேட்!



காட்பரிஸ்

ஒவ்வொரு சாக்கலேட்டும்
பாலின் குணங்கள் அடங்கியது!

AIYARS-C.142 TM

# உங்கள் கேசம் உதிரத் தொடங்கினால் அல்லது பொடுகு விழுந்தால்

## அதை உடனே நிறுத்துங்கள்!

**உற்ற தருணத்தில் கவனித்தால், கேசம் உதிர்வதையும் பொடுகு விழுவதையும் தடுக்கலாம் என்று ஆழ்ந்த பரிசோதனைகள் நிரூபித்துள்ளன**

**கேசம் உதிரக் காரணம்**

கேசத்தின் ஆரோக்கியம் அதன் வேர்களை—மயிர்க்கால்களை-பொறுத்துள்ளது. வேர்களுக்கு அருகிலுள்ள பாகங்கள் உயிரற்றுப் போனாலும், ரத்தஓட்டம் நின்றாலும் வேர்களுக்கு அவசியமான ஊட்டம் கிடைப்பதில்லை.




அடிக்கடி கேசத்தை சீவினாலும், சோப் போட்டுக் கழுவினாலும், கேசம் பெருமளவில் உதிருகின்றது. கேசம் உதிர்வதற்கு இதுவே அறிகுறி.

**ஆபத்தான பொடுகு விழாமல் காத்துக் கொள்ளுங்கள்:**

பொடுகு விழுவதைப் புறக்கணிப்பதால்தான் கேசம் உதிரத் தொடங்குகிறது.

**கேசம் உதிர்வதையும் பொடுகு விழுவதையும் தடுக்கப்பயனுள்ள வழி**

20 ஆண்டுகளுக்கும் மேலாக எஃப். ஹாப்மன்லா ஆய்வுக்கூடத்தில் ஆழ்ந்த ஆராய்ச்சிகள் நடத்தி, பாந்தினால் என்னும் ஓர் அற்புதமான ஊட்டப் பொருள் கண்டுபிடித்துள்ளார்கள். அந்த ஊட்டப் பொருள் உயிரற்ற செல்களுக்குப் புத்துயிரூட்டுகிறது. இந்த பாந்தினால் கொண்ட பான்டீன் விரைவிலேயே மேலை நாடுகளில் உச்ச விற்பனையுள்ள கேச டானிக்காக விளங்கி விட்டது.

பாந்தினால் கொண்ட பான்டீன் அவசியமான எல்லா மூன்று பாகங்களிலும் செயல் புரிகிறது. (அ) வேர்களின் அருகிலுள்ள பாகத்துக்குப் புத்துயிரூட்டி, போஷாக்கு அளிக்கிறது. இதனால் கேசம் உதிர்வது நின்று விடுகிறது. (ஆ) மண்டைத் தோலை சுத்தம் செய்கிறது; நோய்க் கிருமிகளைக் கொல்லுகிறது; கேசம் உதிர்வதைத் தடுக்கிறது. (இ) மயிர்க்கால்களுக்குப் புத்துயிரளித்து, கேசத்திற்குப் பளபளப்பூட்டுகிறது.

மண்டைத் தோல்
கேசம்
மயிர்க் கால்கள்
பான்டீன் புரியும் செயல்!

**பான்டீனின் வெற்றியின் இரகசியம்- நாள்தோறும் உபயோகியுங்கள்**

பான்டீன், மற்ற சாதாரண டானிக்குகளைப் போலன்றி, இலேசாகவும் பிசுக்கற்றும் உள்ளது. இது மண்டைத் தோலுக்கு அடியில் இறங்கி செயலாற்றுகிறது. இதனால் மயிர்க்கால்களுக்கு ஊட்டம் கிடைக்கிறது.

கேசம் உதிர்வதையும் பொடுகு விழுவதையும் தடுக்க சிறந்த வழி, நாள்தோறும் பான்டீன் உபயோகிப்பது.

**பான்டீன்—கேசத்திற்கு அவசியமான டானிக், உன்னத அலங்கார சாதனம்**

பான்டீன் ஒன்றுதான் விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்ட கேச டானிக். இது கேசத்திற்கு ஊட்டமளிப்பதோடு, உலகின் பிரபல கேச அலங்கார சாதனங்களில் ஒன்றாகவும் விளங்குகிறது. பான்டீன் உபயோகியுங்கள்; கேசத்திற்குப் புத்துயிர் அளியுங்கள்.




**பான்டீன்** கேசத்திற்கு

**ஸ்விட்ஜர்லாந்தின் வைட்டமின் ஃபார்முலா-இந்தியாவில் கிடைக்கிறது.**

பிசுக்கற்ற 'எண்ணை கொண்ட ஃபார்முலா

Creative Unit-422

# பெத்த மனம் பித்து



படத்தின் ஆரம்பக் காட்சிகள் நன்றாயிருக்கின்றன. அநாதை ராமுவிடம், கோடீசுவரரின் மகளான சீதா காதல் கொள்ளும் விதம் நன்றாயிருக்கிறது. ஆனால் ராமுவையே கல்யாணம் செய்து கொள்ளும் நோக்கத்துடன் சீதா, தான் கர்ப்பமாயிருப்பதாகக் கூறுவது நன்றாயில்லை. ராமுவாக முத்துராமனும், சீதாவாக ஜெயாவும் அருமையாக நடித்திருக்கின்றனர். அதுவும் முத்துராமன் மிக இயல்பாக நடித்திருக்கிறார்.

தமிழ்ப் படங்களில், கதைக்குப் பஞ்சம் ஏற்பட்டிருக்கிறபடியால், மீண்டும் மீண்டும் பார்த்த சம்பவங்களையே பார்த்து வேதனைப் படவேண்டியிருக்கிறது. ஒரு படத்தில் பணக்காரத் தந்தையை எதிர்த்துக் கொண்டு பிள்ளை வெளியேறினான் என்றால், இன்னொரு படத்தில், அவனுக்குப் பதிலாகப் பெண் புறப்படுகிறாள். இதனால் புதுமையை விரும்பிப் படம் பார்க்கிறவர்களுக்கு ஏமாற்றமும் அதிர்ச்சியும்தான் ஏற்படுகின்றன. இந்த வேதனை போதாதகுறைக்கு, இன்னொரு சோதனை! ஒரே நடிகரை, அதே பாத்திரத்தில் படத்துக்குப் படம் பார்க்க நேரிடுவதைத்தான் சொல்லுகிறேன். கொஞ்சம் சிரமம் எடுத்துக் கொண்டு புது முகங்களைப் போடக் கூடாதா?

இடைவேளைக்குப் பிறகு, படத்தில் பல அசம்பாவிதங்கள்! அழையாத வீட்டில், பெற்ற பெண்ணே நுழைந்து தன் தகப்பனிடமே அவமதிப்புக்குள்ளாவதும், உடன் பிறந்த சகோதரியே, தன் ஏழைத் தங்கையின் மீது இருட்டுக் குற்றம் சுமத்துவதும் — அநாவசியமாகப் படம் பார்ப்பவர்களைப் பழி வாங்குவதாகவும் உள்ளது. இவற்றிலும் புதுமையான அம்சம் எதுவும் இல்லை.

வாசற்காப்போன் ராமு, தன் முதலாளியின் மகள் சீதாவைப் பார்க்கவே பயப்படுவதும், சீதா அவனுக்குத் தைரியம் சொல்லுவதும் நன்றாயிருக்கின்றன. அதற்கு மேல் திரைக் கதையில் ஒரு நல்ல மாறுதலை எதிர்பார்த்த எனக்கு ஏமாற்றமே கிடைத்தது.

பிரபல நட்சத்திரங்களையே திரைப்படக் கதாநாயகியாகப் பார்த்து அலுத்துப்போன கண்களுக்கு ஜெயாவைக் கதாநாயகியாகப் பார்ப்பது மகிழ்ச்சியைத் தருகிறது. அவரும் நடிப்பில் எந்தக் குறையையும் வைக்கவில்லை. சபாஷ், ஜயா!

இந்தப் படத்தின் தயாரிப்பாளர் சி. குகநாதன் ஆர்வமுள்ள இளைஞர்; அவரே திரைக்கதை, வசனம் எழுதியிருக்கிறார். அவர் மனம் தளர்ந்துவிடாமல் முயன்றால், புதுமையான கதையம்சத்தைக் கொண்ட ஒரு படத்தைத் தயாரிக்க முடியாதா என்ன? —காந்தன்

வெண்கல மணிகள் பல ஒரு சேர ஒலித்ததுபோல் கிண்கிணிச் சிரிப்பொலி வாசலில் கேட்டது. முற்றத்தில் அமர்ந்து அரிசியில் கல் பொறுக்கிக் கொண்டிருந்த தர்மாம்பாள் எட்டிப் பார்த்தாள். வேதாவும், அவள் பின்னே சாம்பமூர்த்தியும் வந்து கொண்டிருந்தார்கள். மறுபடியும் அவர் என்ன 'ஹாஸ்யம்' அடித்தாரோ, அவள் மீண்டும் கலகலவென்று சிரித்தாள். தர்மாம்பாள் முகத்தைச் சுளுக்கிக் கொண்டு அடுக்களைப் பக்கம் சென்றாள்.

''அம்மா, டிபன்!....'' — அம்மாவின் முக பாவம் அப்போது எப்படி இருக்கும் என்பது அவளுக்குத் தெரியுமாகையால் எங்கோ பார்த்தபடியே கொஞ்சலாகக் கேட்டாள் வேதா. இது பழகிப் போன செயல்.

தட்டுக்களில் கேசரியும் பஜ்ஜியும் வைத்து மகளிடம் நீட்டினாள் தாயார். வேதா கூடத்து அறையை நோக்கிச் சிட்டாய்ப் பறந்தாள்.

மேசையில் தட்டுக்களை வைத்துவிட்டு நாற்காலியில் அமர்ந்த அவள் சாம்பமூர்த்தி கண்




எல்லார்வி

ணோட்டம் விட்டுக் கொண்டிருந்த செய்தித்தாளை வெடுக்கென்று பறித்து அப்பால் வைத்தாள். ''முதலில் இது: அப்புறம் அது'' என்று சிற்றுண்டித் தட்டுக்களைச் சுட்டிக் காட்டினாள். அவர் ஏதோ பெரிய ஹாஸ்யத்தைக் கண்டு விட்டாற் போல் குலுங்கக் குலுங்கச் சிரித்தார். ஒரு தட்டைத் தம் பக்கமாக இழுத்தவர், ''ஓ !... இது என்ன! இவ்வளவையும் நான்....'' என்றபடி, கேசரியில் ஒரு பகுதியை எடுத்து அவள் தட்டத்தில் போடப்போனார். அவள், ''நான் மட்டும் என்ன பகாசுரியா?'' என்று அவர் செயலைத் தடுத்தாள்.

கைகள் இரண்டும் போராடிக் கொண்டிருக்கிற அந்த நேரத்திலே தர்மாம்பாள் கூஜாவில் தண்ணீருடன் அங்கே வந்தாள். அப்போது சாம்பமூர்த்தி. ''அசுரனுக்குப் பெண்பால் அசுரியா ?'' என்று கேட்டுவிட்டு 'ஓகோ' வென்று வாய்விட்டுச் சிரித்தார். அவளும் அந்தச் செயலில் கலந்து கருதி கூட்டினாள்.

தர்மாம்பாள் குனிந்த தலை நிமிராமல் அங்கிருந்து அகன்றாள். 'என்ன அட்டகாசம்! இப்படியெல்லாம் இருந்தால்தான் அன்பு என்று அர்த்தமா ? நாலு காசு சம்பாதிக்கிற திமிர்!' என்று பல்லைக் கடித்தாள்.

சற்றுப் பொறுத்து வேதாவே உள்ளே வந்து காப்பியை எடுத்துச் சென்றாள். பெருமூச்செறிந்தபடி சுவரில் சாய்ந்திருந்த தர்மாம்பாளின் உள்ளம் வேதனையால் கசந்தது.

மறுபடியும் முன்புறத்தில் பேச்சும் சிரிப்பும் அமளிப்பட்டன. தர்மாம்பாள் எழுந்து எட்டிப் பார்த்தாள். சாம்பமூர்த்தி புறப்பட்டார். வேதா அவர் பின்னோடு சென்று வழி அனுப்பினாள். தர்மாம்பாள் சூள் கொட்டினாள்.

''சுரேஷ் இன்னும் வரவில்லையா அம்மா?''



''உம். வந்துவிட்டு எங்கோ போயிருக்கிறான்.'' — வறண்ட குரலில் கூறிவிட்டு, தர்மாம்பாள் அலுவல்களைக் கவனிக்கச் சென்றாள். இப்போது வேதா நெடுமூச் செறிந்தாள்.

பின்புறத்தில் நிழலாட்டம் தெரிந்தது. வேதா திரும்பிப் பார்த்தாள். சிரித்த முகத்துடன் ஓர் அம்மாள் வந்து கொண்டிருந்தாள். ''வாருங்கள்'' என்று பவ்யமாக அழைத்த வேதா, புருவங்களைக் குவித்து, அந்த அம்மாளை எங்கோ, எப்போதோ பார்த்ததை நினைவுகூர்ந்தபடி மின்விளக்கைப் பொருத்திவிட்டு அம்மாவைத் தேடிக் கொண்டு உள்ளே சென்றாள்.

தர்மாம்பாள் வந்தாள். வந்த அம்மாளை அமரச் சொல்லி, தானும் அமர்ந்தாள். அந்த அம்மாள் சொன்னாள்:

'' என் பேர் ஞானம்பாள். இந்தத் தெருக் கோடியில் புதிதாகக் குடிவந்திருக்கிறேன். எனக்கு ஒரே பிள்ளை. ராஜ கோபாலன் என்று பெயர். சர்க்கார் உத்தியோகத்தில் கைநிறையச் சம்பாதிக்கிறான். திருவிடைமருதூரில் ஒரு வீடும் கொஞ்சம் நிலமும் இருக்கின்றன. என் பிள்ளைக்குக் கல்யாணம் செய்ய வேண்டும். அதற்கு உங்கள் உதவி தேவை. செய்வீர்களா ?''

ஞானம்பாளின் பேச்சு இனிய சங்கீதம் போல் இருந்தது. சிறந்த எழுத்தாளரின் நாவலில் ஒரு பாராவைப் படிப்பது போல் இருந்தது. தர்மாம்பாள் தன் மனத்துக்குள் வியந்து கொண்டாள்.

'' என்ன யோசனை ?''

''யோசனை ஒன்றும் இல்லை. நீங்கள் என்ன சொல்கிறீர்கள் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை.''

''புரியும்படி சொல்கிறேன். எங்கள் ராஜு எட்டு வயதிலேயே அப்பாவுக்குப் பாவத்தைச் செய்தவன். அவனை அறிவாளியாக, பண்பாளனாக உருவாக்கி இன்றைய நிலைக்குக் கொண்டு வர நான் பட்டபாடு பெரிய இதிகாசம் போன்றது. இன்று அவன் வயது முப்பத்தொன்று. இருபது வயது முதலே அவனை மணையில் இருத்திப் பார்க்க முயன்று வருகிறேன். நல்ல பிள்ளைதான். ஜாதகம், குலப் பெருமை முதலியவற்றைப் பொருட்படுத்தாத அவன் காரணம் புரியாத முறையில் காலத்தைக் கடத்தி வந்தான். எந்தப் பெண்ணுக்கும் ஏதாவது நட்டாங்கு சொல்வதே அவன் இயல்பாகிவிட்டது. நான் என்ன செய்ய முடியும் ? வேதனையில் உழன்று வந்தேன்.

'' இரண்டு மாதங்களுக்குமுன் ஒரு நாள் திடீரென்று என்னிடம் வந்து, 'இதோ பார்த்



தாயா, அம்மா!' என்று ஒரு பெண்ணின் படத்தைக் காட்டினான். 'சிறந்த அழகி; இல்லே?' என்று என் முகத்தைப் பார்த்தான். 'அழகுக்கு ஏற்றபடி குணமும் இருந்தால் உயர்த்திதான்.' 'கல்யாணம் ஆகாத பெண்ணா? யார் என்று விசாரியேன்' என்று நான் சொன்னதுதான் தாமதம்; சிரித்தானே சிரித்தானே அப்படிச் சிரித்தான். 'அம்மா, நான் ஒரு பைத்தியம், என்னைப் பெற்ற நீ ஒரு பைத்தியம்! ஆபீசுக்கு வந்த காலண்டர்களில் ஒன்றிலிருந்து இதை நான் கத்திரித்து எடுத்து வந்தேன். தேர்ந்த ஓவியனின் கைவண்ணமோ; அல்லது யாராவது சினிமா நடிகையின் வண்ணப் படமோ யார் கண்டார்கள்?' என்றான்.''

தர்மாம்பாள் கதை கேட்பதுபோல் கேட்டுக்கொண்டிருந்தாள்.

''நேற்று ராஜு பரபரப்புடன் என்னிடம் வந்து சொன்னான்: 'மருமகள், மருமகள் என்று பத்து வருஷங்களாய்த் தவம் கிடந்தாயே, உன் ஆவல் நிறைவேறும் காலம் வந்துவிட்டது என்று தோன்றுகிறதம்மா. அதோ அந்தப் படத்திலே காட்சி யளிக்கும் பெண்ணின் சாயலில் ஒரு பெண்ணை இன்று காலையில் பார்த்தேன். ஒருவரிடம் மேலோட்டமாகப் பேசியதில் திருமணம் ஆகாத பெண் என்பதும் தெரிந்தது. உன்னால் முடிந்தால் முயன்று அவளை உன் மருமகள் ஆக்கிக் கொள்' என்றான்.''

ஞானம்பாள் சற்றே பேச்சை நிறுத்தினாள்.

பின்கட்டில் சென்று கைகால் முகம் கழுவிக் குங்குமம் தரித்து அம்பாளை வணங்கித் தோத்திரப் புத்தகத்துடன் அம்பாளின் முன் அமர்ந்திருந்த வேதாவின் செவியில் எல்லாம் தெளிவாக விழுந்து கொண்டிருந்தது. முதல் நாள் காலையில் அலுவலகம் செல்லும்போது ஸ்கூட்டரில் எதிர்ப்பட்ட வாலிபனின் எழில் உருவம் அவள் மனக் கண் முன்னால் பளிச்சிட்டது. அந்த நயனங்களின் கவர்ச்சி, வார்ப்படம் செய்த சிலையின் அதரங்கள் போன்ற இதழ்கள், கூர்மையான நாசி, அழகிய மோவாய் — மறக்க முடியாத அந்த எழில் உருவம் அவள் நெஞ்சின் அடித்தளத்திலேதான் புதைந்திருந்தது. ஞானம்பாளின் பேச்சு அவள் உள்ளத்திலே கிளர்ச்சியை உண்டுபண்ணி அவளை நிலைகுலையச் செய்தது.

அதே நேரத்தில் அந்த இன்பக் கிளர்ச்சிக்கு நேர்மாறான நெஞ்சக் குமைவும் ஏற்பட்டதின் விளைவாக அவள் விழிகளில் நீர் சுரந்தது. அம்பாளை நிமிர்ந்து பார்த்தாள். தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் விம்மினாள். உதட்டைக் கடித்து அழுகையை அடக்கிக் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். கூடத்திலே ஞானம்பாள் பேச்சைத் தொடர்ந்தாள்:

''பெரும் புதையலைக் கண்ட ஏழையைப் போல் பரபரப்புடன் ராஜுவிடம் கேள்விச் சரங்களைத் தொடுத்தேன். அவன் சொன்ன அடையாளப்படி இந்த வீட்டில் வந்து நுழைந்து உங்களிடம் பிச்சை கேட்கிறேன். உங்கள் பெண்ணை என் மருமகளாக ஆக்கிக் கொள்ள நீங்கள் மனம் வைக்க வேண்டும்.''

தர்மாம்பாளுக்கு ஒருபுறம் மகிழ்ச்சி; மறுபுறம் வேதனை. அவள் பேச முடியாமல் திணறினாள். ''நீங்கள் சொன்னதையெல்லாம் என் பெண்ணிடம் சொல்கிறேன். அவள் சரி என்றால் சரிதான்'' என்று அவள் கூறி முடித்தபோது கடிகாரம் ஒலித்தது.

''நல்ல சகுனம். அம்பாள் இதை நிறைவேற்றுவாள்.''

ஞானம்பாள் விடைபெற்றுச் சென்றாள். படபடப்புடன் எழுந்து வந்தாள் வேதா.

''அந்த அம்மாள், அந்தப் பிள்ளை இருவருமே உன் மேலே கொள்ளை ஆசையை வைத்திருக்கிறார்கள் என்று தெரிகிறது. ஆனால்.... என்ன பிரயோசனம்?'' என்று முணுமுணுத்தாள் தர்மாம்பாள்.

''சரி. தெய்வ சங்கல்பம் எதுவோ அதன்படி எல்லாம் நடக்கும். இல்லையா? இது தை மாதம். சித்திரை பிறந்ததும் இதை நடத்திவிடலாம் என்று சொல்லு. அதற்குள் அவர்களே பின்வாங்கிவிடுவார்கள்.''

''உம். அதைத்தான் நீ விரும்புகிறாய். இல்லையா? சட்டென்று காதும் வாயும் வைத்தாற்போல் நாளைக்கே காரியத்தை முடித்துவிடத் தாய் உள்ளம் துடிக்கிறது.''

''பிரஸ்தாபம் வெளியில் தெரிந்த உடனேயே புண்ணியவான்கள் தங்கள் கைங்கரியத்தில் ஈடுபட்டுவிடுவார்களே! இதற்குமுன் நாலு தடவை அப்படித்தானே தடை ஏற்பட்டு மானம் பறி போயிற்று.''

''மூன்று மாதங்கள் கழித்தால் மட்டும்?''

''இடையில் என்னைப் பற்றி அவர்கள் கேள்விப்படுவார்கள். அதைப் பொருட்படுத்தாமல் வந்தார்கள் என்றால் நல்லதுதானே?''

''அதே தவிர நீ இந்த நாடகத்தைவிட மாட்டாய்!''

''நா...ட...க...மா?... ஹூம்!'' — வேதா பேச்சை முறித்துக் கொண்டு அப்பால் சென்றாள்.

ஆவேசமாகப் பாய்ந்து வரும் அலைகளைப் பார்த்தபடி மணலைக் கையால் அளைந்தவண்ணம் ஏகாந்தமாக அமர்ந்திருந்தாள் வேதா. அருகே நிழலாட்டம் கண்டு சட்டென்று திரும்பிப் பார்த்தாள்; ராஜகோபாலன். திடுக்கிட்ட அவள் மரியாதையை எண்ணி எழுந்தாள்.

''சற்று நேரம் உட்காரலாமா?'' அடக்கமாகக் கேட்டான்.

இருவரும் அமர்ந்தார்கள். வேதா நாற்புறமும் சுற்றிப் பார்த்துவிட்டுத் தலையைக் குனிந்து கொண்டாள்.

''நீ வைத்த கெடு முடிய இன்னும் சில நாட்கள் இருக்கின்றன. அதற்குள் தற்செயலாக இப்படி ஒரு வாய்ப்பு. இதைத் தவறவிட மனம் வரவில்லை.''

அவள் இலேசாக முறுவலித்தாள். என்ன பேசுவது என்று புரியாமல் மணலில் விரலால் கோலமிடலானாள். நாணம் அவள் அழகுக்கு மேலும் மெருகூட்டுவதை அவன் ரசித்தான்.

''எதற்காக அந்தக் கெடு என்பதை நான் அறியலாமா?''

''இப்படி ஒரு சந்தர்ப்பமே வாய்க்காது என்பதனால்தான் கெடு வைத்தேன்.''

''புரியவில்லையே!''

## உங்கள் குடும்பத்திலுள்ள ஒவ்வொருவருக்கும் நோவா ஸ்தாபனத்தாரின் பரிசுகள்

உங்களை அழகுடன் விளங்கச் செய்வதுடன், உங்கள் வசீகரத்தன்மையை நீடித்து பாதுகாத்து உதவ புத்தம் புதிய நறுமணத்துடன் கூடிய பிரிலியன்டைன், ஸ்நோ, டால்கம் பவுடர், முதலிய பல ரகங்கள் உள்ளன.




உங்கள் குடும்பத்தின் அழகு பராமரிப்பை நோவா முறையிலேயே பாதுகாத்துக் கொள்ளுங்கள்

தயாரிப்பாளர்கள் :

**நோவா கம்பெனி**

லால்பகதூர் சாஸ்திரி மார்க்
பாண்டுப், பம்பாய்-78



## அழுத பிள்ளை சிரிக்குமாம்...

# அமிர்தாஞ்சன் கிரைப் மிக்ஸ்சர்

அஜீரணம், வாயு, தூக்கமின்மை, வாந்தி, வயிற்றுப் போக்கு போன்ற குழந்தையின் உடல் கோளாறுகளை விரைவில் குணப்படுத்துகிறது.

பசியைத் தூண்டி, ஜீரணசக்தியைச் சீராக்கி, குழந்தையை ஆரோக்கியத்துடன் கொழுகொழுவென்று வளரச் செய்கிறது.




அமிர்தாஞ்சன் லிமிடெட்

FDSAG1659TM




**ஹகோபா** இவர்கள் தயாரிக்கும் எம்பிராய்டர்ட் துணிவகைகள் மற்றும் எம்பிராய்டர்ட் லேஸ்களுக்கான பதிவுபெற்ற வியாபாரச் சின்னமாகும்: ஃபேன்ஸி கார்ப்பொரேஷன் லிமிடெட், 16, பம்பாய் சமாசார் ஸ்ட்ரீட், பம்பாய்-1.

''நீங்கள் எங்கள் வீட்டண்டை புதிதாகக் குடி வந்தவர்கள். சில நாட்கள் போனால் என்னைப் பற்றிய செய்திகள் கிட்டும்; அதன் பின்னர் நீங்கள் என்னை மறந்துவிடுவீர்கள் என்பதனால்தான் கெடு வைத்தேன்.''

'' ஓகோ !.... கெடுவுக்குக் காரணம் தெரிந்தது. ஏதோ செய்தி என்கிறாயே, அது என்ன என்பதையும் தெரிந்து கொள்ளலாமா? பிறர் வாய் வழி என்ன? புத்திசாலியான நீயே அதையும் சொல்லிவிட்டால் நிம்மதி பெறுவேன்.''

வேதா சோகச் சிரிப்புச் சிரித்தாள். '' அதைக் கேட்டால் உங்களுக்கு நிம்மதி ஏற்படாது; நிம்மதிக் குறைவுதான் ஏற்படும். ஆனால் ஒன்று; முதல் முறை உங்களைப் பார்த்தபோது என் மனத்தில் ஏற்பட்ட உயர்ந்த அபிப்பிராயம் உங்கள் அம்மாவின் பேச்சினால் மேலும் ஒரு பிடி உயர்ந்தது. உங்களை ஓர் இலட்சியபுருஷராக என் மனம் எண்ணுகிறது. சராசரி ஆண்களைப் போல் அல்லாமல் விவேகத்துடன் எதையும் நன்கு ஆராய்ந்து உண்மையைக் காணும் ஆற்றல் உங்களிடம் இருக்கும் என்று ஒரு நம்பிக்கை. ஆகவே, ஒரு நாள் நானே உங்களிடம் எல்லாவற்றையும் எடுத்துச் சொல்லி, தெளிவுபடுத்தி, என்னை உங்கள் குடும்பத்தில்.....''

பேசிக் கொண்டே வந்தவள் இரு கைகளாலும் முகத்தை மூடிக் கொண்டாள். விம்மலும் விசிப்பும் அவளை ஆட்கொண்டன.

ராஜு சற்று நேரம் பேசாமல் இருந்தான். பிறகு ஆணித்தரமாகச் சொன்னான். ''உன்னைப் புத்திசாலி என்று சற்று முன் சொன்னேன். அது தவறு என்று நீ நிரூபிக்க முயல்கிறாய். அழுவது அறிவீனம். பளிச்சென்று பேசு வேதா. எதுவானாலும் கூசாமல் சொல்!''

அவள் கண்களைத் துடைத்துக் கொண்டாள். ''நான் ... நான்... கெட்டவளாம்... நடத்தை பிசகினவளாம்!''

''யார் சொன்னார்கள்?''.

''ஊரார் சொல்கிறார்கள்.''

''ஏன் சொல்கிறார்கள்?''

''ஒரு நாள் சாயங்காலம் அதோ அந்த இடத்தில் நீங்கள் உங்கள் நண்பர்களோடு பேசியபடி நின்றிருந்தீர்கள். நான் அந்தப் பக்கமாக ஒருவரோடு வந்தேன். நான் உங்களைப் பார்த்தேன்; நீங்களும் என்னைப் பார்த்தீர்கள். என்னோடு வந்தவரையும் பார்த்திருப்பீர்களே!''

''பார்த்தேன்; ஞாபகம் இருக்கிறது. அன்று மட்டும் அன்று; அதற்கு முன்னாலும் இரண்டு மூன்று முறைகள் உங்களைச் சேர்த்துப் பார்த்திருக்கிறேன். அப்போதெல்லாம் நீ என்னைப் பார்க்கவில்லை.''

''அவருக்கு வயது என்ன இருக்கும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்?''

''சுமார் நாற்பதுக்குப் பக்கமாக இருக்கலாம். அதற்கென்ன?''

''தப்புக் கணக்கு. அவர் வயது ஐம்பத்தொன்று. என் அப்பாவைவிட ஒரு வயது மூத்தவர். இளமை தொட்டுச் செய்த உடற்பயிற்சியாலும், இராணுவப் பயிற்சியாலும் அவர் அப்படித் தோன்றுகிறார்.''



ஊழல்! - அண்ணா தரும் விளக்கம்

ஊழல், பொது வாழ்க்கை பற்றி அறிஞர் அண்ணா அவர்கள் கூறியது:

□ ''....அமைச்சர்கள் கொள்ளையடித்து விட்டார்கள், இலஞ்சம் வாங்கினார்கள் என்றால் மட்டும்தான் நிர்வாகத்தில் ஊழல் ஏற்பட்டு விட்டது என்று பொருள் கொள்ளக் கூடாது. அமைச்சர்கள் ஒரு துரும்புகூடத் தமக்காக எடுத்துக் கொள்ளாத தர்மவான்களாக இருக்கலாம். ஆனால் அவர்கள் நடத்தும் துரைத்தனத்தில் ஆறு லட்சத்தில் கட்டி முடிக்கப்பட வேண்டிய ஒரு பாலம் எட்டு லட்சம் விழுங்குகிறது என்றால், அதிலே ஒரு காசுகூட அமைச்சருக்குச் செல்லாவிட்டாலும், நஷ்டம் நஷ்டம்தான். நிர்வாகம் ஒழுங்கில்லை என்றுதான் பொருள்!''

□ ''...சொந்த வாழ்க்கையிலே அக்கறை காட்டுவது ஒரு சபலம்.... அதனை நீக்காதவர்கள் பொது வாழ்க்கை என்னும் போர்க்களத்தில் உலவ முடியாது.......''

-தனலட்சுமி ராஜமோகன்

ஆதாரம்: 'அண்ணாவின் பொன்மொழிகள்'

''சரி; மேலே?''

''மேலே சொல்வதுதான் கஷ்டமாக இருக்கிறது!''

''நீ சொல்ல வேண்டாம்; நானே சொல்கிறேன். அவரையும் உன்னையும் இணைத்து... அதுதானே?.... ஊர் அப்படித்தான் பேசும். ஊர் வாயை மூடமுடியாது. வதந்தி எற்பட்ட பிறகாவது உங்கள் உறவை வெட்டிக்கொண்டிருக்கலாமே?''

''அதைவிட அவரையே அரிவாளால் வெட்டிவிடலாம்.''

''ஏன்.... ஏன் அப்படிச் சொல்கிறாய்?''

''ஒரு நாளில் ஒரு முறையாவது என்னைப் பாராவிட்டால் அவர் உயிரே துடித்துப் போகும்!''

''ஓகோ!....''

''தொடக்கத்திலிருந்து சொன்னால்தானே உங்களுக்குப் புரியும்? அவர் பெயர் சாம்பமூர்த்தி. என் அப்பாவும் அவரும் இளமையிலிருந்து இணை பிரியாத நண்பர்கள். ஒரே சமயத்தில் இருவரும் வெளியூர் சென்றார்கள். அப்போது நானும் என் தம்பியும் சிறு குழந்தைகள். அப்பாவிடமிருந்து பணமும் கடிதமும் வந்து கொண்டிருந்தன. பிறகு அவை நின்றன. அம்மா எங்களை வைத்துக்கொண்டு



''சிகரெட், மது, சீட்டு விளையாட்டு மூன்றையும் என் மனைவியைச் சந்தோஷப்படுத்த விட்டு விட்டேனப்பா!''

''அடடே, இப்ப ரொம்ப மகிழ்ச்சியாயிருப்பாளே!''

''நோ... நோ.... இப்பல்லாம் நான் வீட்டுக்குப் போனால் என்னைக் கரித்துக் கொட்ட விஷயமில்லாமல் சங்கடப்படுகிறாள்.''

-நெல்லை நீலகந்தரம்

இல்லாமற் போனான். இடையிடையே இவர் வருவார். அம்மாவைப் பற்றி நல்ல விதமாகத் தகவல்கள் தருவார். கடிதமும் பணமும் வராததற்கு என்ன என்னவோ காரணங்கள் கூறுவார். அனைத்தையும் நாங்கள் மெய்யென்றே நம்பி யிருந்தோம். முழுக்க முழுக்க இவருடைய உதவியிலேயே நாங்கள் வளர்ந்தோம். நான் பி.எஸ்.ஸி. முடித்து வேலை பார்க்கிறேன்; தம்பி சதீஷ் படித்துக் கொண்டிருக்கிறான்.

''உண்மையை எத்தனை காலத்துக்கு மூடி மறைக்க முடியும்? வெளியூர் சென்ற சில காலத்திலேயே எங்கள் அப்பா இறந்துவிட்ட செய்தி இவர் வாய் வழியே ஒரு நாள் வெளிப்பட்டது. இராணுவத்திலிருந்து திரும்பிய இவர் பிரமச்சாரியாக, தாயோடு வசித்து வருகிறார். எங்கள் இருவரையுமே தமது செல்வங்களாகப் பாவித்து அன்பைப் பொழிந்து வருகிறார். இன்று ஏதோ இரண்டு காசு சம்பாதிக்கிறேன். நேற்று வரை?... இவர் அன்பு இல்லை என்றால் எங்கள் மூவர் கதி என்னவாகி யிருக்கும்? ஆனால்... அந்த அன்பு, சிறுவனாகிய என் தம்பியைப் பாதிக்கவில்லை. என் இல்வாழ்வுக்குத்தான் கோடரியாக அமைந்து விட்டது. தொடக்கத்தில் இந்த அபவாதத்தை நாங்கள் மதிக்கவில்லை. அம்மா முயன்ற நான்கு இடங்களிலும் 'பெண் பார்த்த பின் தடை' என்ற நிலை வந்த போதுதான் மனம் உடைந்து போனாள். அடிக்கடி அம்மாவுக்கும் எனக்கும் வாக்கு வாதம் நிகழும். 'அவர் உறவைத் துண்டித்துக்கொள்' என்பாள் அம்மா. நன்றி கொன்ற முறையில் அன்று; என் வாழ்வை எண்ணி. 'வாழ்வே இல்லாது போயினும் சரி; அவர் அன்பைப் புறக்கணிக்க முடியாது' என்பேன் நான். அது மட்டுமன்று; அவர் தொடர்பான ஒரு வதந்தி என் திருமணத்துக்குத் தடை என்பதையே அவர் அறியா வண்ணம் மூடி மறைத்து வருகிறேன். அவர் மகிழ்ச்சிக்காக அவர் எதிரில் மட்டும் சந்தோஷமாக வளைய வருகிறேன். இதுதான் சத்தியமான செய்தி. இதை உலகம் நம்பத் தயாராக இல்லை. நீங்கள்....''

''நான் நம்புகிறேன்!''

''நிஜமாகவா?''

''சத்தியமாக! நீ சொன்ன இவ்வளவு செய்திகளும் நீ சொல்லு முன்பே எனக்குத் தெரியும்!''

''அப்படியா?''

''ஆமாம். முதன் முதலாக உன்னைப் பார்த்த அன்று ஒருவரிடம் உன்னைப் பற்றி மேலோட்டமாகப் பேசினேன். அவர் மூலம் நீ மணமாகாதவள் என்று அறிந்து அதன் பின்பே என் அம்மாவை உங்கள் வீட்டுக்கு அனுப்பி வைத்தேன். 'நீ கெடு வைத்தது ஏன்?' என்று யோசித்துக் கொண்டிருக்கையில் அந்த மனிதர் இரண்டு நாள் கழித்து என்னைத் தேடி வந்து உன்னைப் பற்றிச் சொன்னார். என்னால் அதை ஏற்கவும் முடியவில்லை; உன்னை மறக்கவும் முடியவில்லை. தவித்துத் தடுமாறிக் கொண்டிருக்கையில் முந்தாநாள் எழும்பூர் ரயில் நிலையத்தில் சாம்பமூர்த்தியைத் தனிமையிலே கண்டேன். நல்ல வாய்ப்புப் பெற்றுப் பேச்சுக் கொடுத்தேன். மிகவும் நல்ல மனிதர்; கபடற்றவர். தம் தாய் திருவிடைமருதூர் சென்றிருப்பதாகவும் போன இடத்தில் அவளுக்கு உடல் நலமில்லை என்று பார்க்கச் செல்வதாகவும் சொன்னார். என் ஊரும் அதுதான் என்றதும் பேச்சு வளர்ந்தது. நான் அவருக்கு எட்டின உறவினன் ஆனேன். என்னை அவருக்கு மிகவும் பிடித்து விடவே, மணமாகி விட்டதா என்று கேட்டார். இல்லை என்றதும் உன்னைப் பற்றி வானளாவப் புகழ்ந்து, 'போன உடனேயே திரும்பி விடுவேன். வந்த உடனே முதலாவது அலுவல் உனக்கும் வேதாவுக்கும் திருமணத்தை முடிப்பதுதான்' என்றார், மகிழ்ச்சி பொங்க. அதனாலேதான் இத்தனை காலமாக இல்லாமல் இப்போது உன்னை அணுகித் துணிந்து பேசினேன். மேலும் இன்றுதானே உன்னைத் தனிமையிலே பார்க்க முடிகிறது!'' என்று கூறிக் கண் சிமிட்டி நமுட்டுச் சிரிப்புச் சிரித்தான் அவன்.

வேதா உடம்பைச் சிலிர்த்துக் கொண்டாள். ''ஐயோ உலகமே!''

''அந்த உலகத்திலேதான் நாம் வாழ்ந்தாக வேண்டும். அன்பு இனிமையானது; அதுவே கொடியதாகவும் ஆகி விடுகிறது பார்!.... அதுசரி, இனியும் நீ வைத்த கெடுவரை காத்திருக்க வேண்டுமா?'' கேட்டுவிட்டு விஷமத்தனமாகச் சிரித்துக் கொண்டே அவளைப் பார்த்தான்.

வெட்கம் அவளை நிலைகுலைய வைத்தது. ஓரக்கண்ணால் அவனைப் பார்த்தவள், ''ஓ!... நேரமாகி விட்டதே! புறப்படலாமா? முதலில் இந்த நல்ல செய்தியை என் அம்மாவுக்குச் சொல்ல வேண்டும்'' என்று எழுந்தாள்.

''என் அம்மாவுக்கும்தான்!'' என்று அவன் எழுந்தான்.

அப்போதுதான் நாற்புறங்களிலும் மின் விளக்குகள் பிரகாசிப்பதை அவர்கள் கண்கள் கண்டன. மணற்பரப்பிலே இணைந்து நடந்தபோது அவர்கள் வாய் பேசவில்லை; ஒளி குறைந்த இடத்தை அடைந்தபோது அவர்களின் கைகள் பேசிக் கொண்டன. அதை—அந்தச் செயலை — வானிலே கண் சிமிட்டும் தாரகைகள் ஆமோதித்து ஆசீர்வதித்தன.



# டோரா டோரா டோரா





பேர்ள் ஹார்பர் – என்றாலே கடந்த உலக யுத்தத்தில் அமெரிக்கா அங்கு பட்ட அடிதான் எல்லாருக்கும் நினைவு வரும். அத்தனை பிரசித்தி பெற்ற சம்பவம் அது. ஜப்பான் திடீரென்று ஜெர்மனியோடு சேர்ந்து கொண்டு அமெரிக்கக் கடற்படையைச் சின்னாபின்னமாக்கிய சோக வரலாறு. அதை நம் கண்ணெதிரில் மறுபடியும் நடத்திக் காட்டி இருக்கிறார்கள், 'டோரா, டோரா டோரா' என்ற படத்தில். உலக யுத்தம் சம்பந்தப்பட்ட படமானாலும் இது வழக்கமான படங்களிலிருந்து முற்றிலும் மாறுபட்டது.

எந்த ஒரு வல்லரசாவது தான் அடைந்த தோல்வியை அப்பட்டமாகப் படமாக்கிக் காட்டுமா? இதோ இப்படத்தின் மூலம் அமெரிக்கா காட்டி யிருக்கிறது.

'முத்துத் துறைமுகம்' தாக்கப்பட்டு நாசமாக்கப்பட்டபோது அதில் தொடர்புடைய ராணுவத் தளபதிகள் ஒவ்வொருவரும் எப்படி எப்படி நடந்து கொண்டார்கள், திட்டமிட்டார்கள், ஏமாந்தார்கள் என்பனவெல்லாம் சுவைபட விளக்கிக் காட்டப்படுகிறது. டோரா, டோரா, டோராவில். தங்கள் தோல்வியை, அழிவை, தலைகுனிவைக் கம்பீரமான முறையில் கர்வத்துடன் மறுபடியும் நிகழ்த்திக் காட்டி இருக்கிறார்கள் அமெரிக்கர்கள். ஜப்பானியத் தளபதிகளிடையே சரித்திரப் புகழ்பெற்ற இந்தத் தாக்குதலை நடத்துவதில் கருத்துவேறுபாடு இருந்தது. ஜப்பானியத் தூதுவர் அமெரிக்காவில் யுத்த மந்திரியோடு பேச்சுவார்த்தை நடத்திக் கொண்டிருந்தபோது ஜப்பானியக் கப்பல் படைத் தளபதி யமமோட்டோ யமனைப்போல் ரகசியமாக பேர்ள் துறைமுகத்தைத் தாக்கும் திட்டத்தைத் தம் படை அதிகாரிகளுக்கு விவரித்துக் கொண்டிருந்தார். இந்தத் துரோகத்தில் பங்கு கொள்ள ஜப்பானிய போர்ப் படைஅதிகாரிகள் சிலர் தயங்கியதில் வியப்பில்லை. எனினும், ஒரு சிலரின் யுத்த வெறியினாலும், அமெரிக்கர்களின் அலட்சியத்தினாலும் ஏற்பட்ட நிலையைத் திரையில் காணும் போது.... ஆஹா! அன்றைய 'பேர்ள் ஹார்பர்' இப்படித்தான் இருந்திருக்குமானால்...அது பயங்கரத்திலும் பயங்கரம். இப்படத்தை ஜப்பானியரின் ஒத்துழைப்புடன் டுவென்டியத் செஞ்சுரி பாக்ஸ் நிறுவனம் திரைப்படமாக்கியுள்ளது. இச் சம்பவத்தில் ஜப்பான் தரப்பு நிகழ்ச்சிகளை உருவாக்கும் பொறுப்பை அவர்களிடமே ஒப்படைத்து அந் நாட்டுக் கலை நுணுக்க வல்லுநர்களின் ஒத்துழைப்பையும் பெற்றிருக்கிறார்கள். ஆகவே இருதரப்புச் சம்பவங்களும் மீண்டும் உயிர் பெற்று ஜீவனோடு விளங்குகின்றன. இட்டமிட்டு மகத்தானதொரு வெற்றி கண்டாலும் முடிவில் ஜப்பானிய தளபதி கூறும் அந்த வார்த்தைகள் – ''நாம் தூங்கும் அரக்கனை எழுப்பிவிட்டோம். அவனும் பழி வாங்கும் உறுதியோடு எழுந்து விட்டான்.''

இந்த வார்த்தைகளின் பொருளை ஜப்பானியர் ஹிரோஷிமாவில் கண்கூடாகக் கண்டனர்.

உண்மைச் சம்பவத்தை உயிரோட்டத்துடன் படமெடுத்திருக்கும்போது அதில் நட்சத்திர நடிகர்களின் உதவி தேவை இல்லையே. பிரபல நட்சத்திரங்கள் மின்னு விட்டாலும், 'டோரா டோரா டோரா' ஒரு பிரபலமான படம்தான். —**கௌசிகன்**

# காற்றடைத்த கல்!



- கட்டடப் பொருளில் ஒரு புதுமை 'தக்கைக் கல்' என்னும் செல்கிரீட்.
- கட்டும் நேரத்தையும் மொத்தச் செலவையும் சிக்கனப்படுத்த எண்ணூரில் தயாராகும் சாதனம். ஆசியாவிலேயே முதல் தயாரிப்பு.
- போலந்து தொழில் நுட்பம் - மத்திய அரசின் மூலதனம் - தமிழகப் பொறியாளரின் திறமை - இவற்றின் விளைபொருள்.

எண்ணூர் கடலோரத்தில் 'காற்றடைத்த கற்கள்' உருவாகின்றன, தமிழ் நாட்டு வீட்டு வசதி வாரியத்தின் தக்கைக் கல் தொழிற்சாலையில்.

'செல்லுலார் கான்கிரீட்' என்பது கட்டடத் துறையில் ஒரு புதுமை. விரைவுக்கும் சிக்கனத்துக்கும் உதவுவது. புதுமை நாடும் பொறியாளர்களுக்கு ஒரு வரப்பிரசாதம். 'செல்கிரீட்' என்ற செல்லப் பெயரில் மார்க்கெட்டில் அறிமுகமாகும் இதன் வரலாறு சுவையானது.

இரண்டாம் உலகப் போர் முடிந்தபோது, ஐரோப்பாவே ஒரு பெரிய பாலைவனமாகக் காட்சியளித்தது. போரில் அழிந்த குடியிருப்புக்களைப் புதுப்பிக்க வேண்டியிருந்தது — ஒன்று, இரண்டா, லட்சக் கணக்கில். விரைவாயும் சிக்கனமாயும் கட்டட வேலைகளைச் செய்து முடிக்கப் பல சாதனங்களை அப்போது எஞ்சினியர்கள் உருவாக்கினார்கள். அவற்றில் முக்கியமான ஒன்றே செல்லுலார் கான்கிரீட். ஸ்வீடனிலும் போலந்திலும் ஒரு விசேஷ மணலையும் சுண்ணாம்பையும் குழைத்து, சில ரசாயன மாற்றங்களுடன் இறுக வைத்தால் கனம் குறைந்த கடினமான கல் தயாரிக்கலாம் என்பதைக் கண்டுபிடித்தனர். இந்த முறையைப் பயன்படுத்தி, பல மாடிக் கட்டடங்கள் கட்டியுள்ளனர்.

நமது நாட்டில் அடுத்து வரும் பல ஆண்டுகளுக்குக் குடியிருப்புத் தயாரிப்பு அரசுக்கு ஒரு பெரிய பொறுப்பு. எனவே, சிக்கனமும் விரைவும் வேறு பல வசதிகளும் நிறைந்த இத்தகைய 'தக்கைக் கல்' தயாரிக்கும் தொழிற்சாலைகளை நாமே நிறுவிக் கொள்ளலாம் எனப் பாரத அரசு தீர்மானித்தது. போலந்தின் கூட்டு முயற்சியுடன் திட்டம் வகுத்தது. நிபுணர்கள் நாடெங்கும் பல இடங்களுக்குச் சென்று பார்வையிட்டபின் எண்ணூரைத் தேர்ந்தெடுத்தனர் — கடல் அருகே இருந்தும் இந்த மணல், கட்டட வேலைக்கு மிகவும் ஏற்றதாம்.

மத்திய அரசு வழங்கிய 365 லட்சம் ரூபாயில் மாநில அரசு, தமிழ் நாட்டு வீட்டு வசதி வாரியத்தின் கீழ் ஓர் அமைப்பாக இந்தத் தொழிற்சாலையை அமைத்தது.

பொறி இயல் நிபுணர் அறுவர், பிராஜக்ட் ஆபீசர் திரு பி. எஸ். நடராஜன் உள்பட, போலந்து சென்று பயிற்சி பெற்றனர்.





போலந்து நிபுணர்களும் இங்கே வந்து, அவர்கள் நாட்டில் உள்ளது போலவே பெரிய அளவில் தொழிற்சாலையை அமைத்துக் கொடுத்துள்ளனர். தற்போது இந்தத் தொழிற்சாலை, சோதனை அளவில் தயாரிப்பு நிலை முடிந்து, முழு அளவில் தயாரிப்புக்குத் தகுதியுடன் விளங்குகிறது. டிசம்பரில் இதை முறையாகத் தொடங்கி வைத்தார் தமிழக முதல்வர்.

செல்கிரீட் கல் ஒன்று பதினைந்து சாதாரண செங்கல் அடைத்துக் கொள்ளும் இடத்தை நிரப்புகிறது. ஆனால் எடுத்துப் பார்த்தாலோ கனம் குறைவாக இருக்கிறது. இது எப்படி? இந்தக் கல்லின் உள்ளே, திட்டமிட்டுப் பல காற்றறைகள் இருப்பதே காரணம். கல்லின் கனத்தைக் குறைக்க மட்டுமே பயன்பட்டு, அதன் உறுதியையோ பயனையோ குறைக்காது சேர்ந்த காற்றறைகள் இவை.

இந்தக் காற்றறைகள் எவ்வாறு தயாராகின்றன? மணற்சேறு ஒருபுறம், கல் சுண்ணாம்புத் தூளும் மணலும் சிமெண்டும் ஒருபுறம் — தனித்தனியே இரண்டு கலவைகளாகத் தகுந்த அளவில் தயாராகி ஒன்றாகச் சேர்த்துக் கலக்கப்படுகின்றன. அந்த நேரத்தில் கொஞ்சம் அலுமினியப் பொடியும் ஒரு ரசாயனக் கலவையாகச் சேர்க்கப்படுகிறது. இந்த மொத்தக் கலவை அப்படியே பாளம் பாளமாகப் பெரிய எஃகுத் தொட்டிகளில் முக்கால் நிறைவாக வார்க்கப்படுகிறது.

இப்போது இயற்கையின் ரசாயனம் தன் பணியைத் தொடர்கிறது. சுண்ணமும் அலுமினியமும் ஹைடிரஜன் வாயுவை வெளியேற்றப் பார்க்க, அந்த வாயுவோ மணற் கலவையையே மீறி மேலெழும்பப் பார்த்து ஓய, இம் முயற்சியில் கலவை முழுத்தொட்டி உயரத்துக்கு மூன்று மணி நேரத்தில் எழும்பி விடுகிறது, இட்டிலி மாவைப் போல். ஆனால் ஓரளவு இறுகி விடுகிறது. இனி கீழே இறங்காது. இந்த நிலையில் கலவைத் தொட்டிகளை அப்படியே நகர்த்தி, எஃகுச் சுவர்களை நீக்கி, பெரும் பாளமாக நிற்கும் கலவையைச் சிறு சிறு துண்டுகளாகக் குறுக்கும் நெடுக்குமாக அறுத்து விடுகிறார்கள். இதற்கென அமைந்த டிராலி ரயில்களும், கிரேன் அமைப்புகளும், எஃகுக் கயிறு ரம்பங்களும் சுறுசுறுப்பாக இயங்குவதே ஒரு காட்சி. உடனே இந்தப் பாளங்கள், வரிசை கெடாமல் அப்படியே டிராலியுடன் நீண்ட பெரிய எஃகு உருளை அறைகளுக்குள்ளே அடைக்கப்படுகின்றன. சுமார் பதினேழு மணி நேரம் மிக அதிகமான நீராவி வெப்ப அழுத்தத்தில் வேக வைக்கப்படுகின்றன. இதற்குப் பிறகு அந்தக் கற்கள் கட்டட வேலைக்குத் தயார்.

எங்கும் கிடைக்கும் எளிய பொருள்களைக் கொண்டு தயாராகும் கல்தான் என்றாலும் இந்தத் தயாரிப்பின் ஒவ்வொரு கட்டத்திலும் நுட்பமான அக்கறை அவசியம்.

தயாரிப்பின் தரத்தைப் பார்த்துக் கொள்ளும் முறைகளை விவரித்தார் இரசாயனப் பொறியாளர் திரு ம. ரத்னம்.

சுண்ணாம்புக்கல் நல்ல தரமானதாக இருக்க வேண்டும். இதற்கெனத் திருச்சி மாவட்டத்தில் மேலரசு சுரங்கத்தில் இது தோண்டி எடுக்கப்படுகிறது. அதைச் சுட்டுப் பொடியாக்கும் சூளைவாய் இங்கே தனியே இருக்கிறது. இதற்கெனத் தரமான நிலக்கரி வங்கத்திலிருந்து வருகிறது. சுண்ணாம்பு பழசாகி விட்டால் இரசாயன மாற்றம் நிகழ்த்துவதில் தவறு ஏற்படலாம். இது போலவே கலவையின் அளவு, அரைவையின் சுழற்சி, அலுமினியத் தூளின் அளவு, அதைச் சேர்க்கும் நேரம், கலவை ஊறும் நேரம், நீராவியின் சூடு, வேக வைக்கும் காலம் — என்று ஒவ்வொரு படியிலும் இந்த அரசுத் துறைத் தொழிலகத்தில் கருத்தும் கவனமும் தொடர்ந்து இருக்க வேண்டும்; இருக்கும் என்று எதிர்பார்ப்போம்.

இன்று நகரெங்கும் தமிழ் நாட்டு வீட்டு வசதி வாரிய அமைப்புக்களில் செல்கிரீட் பயன்பட்டு வருகிறது. சாதாரண செங்கல் கொண்டு இரண்டு வீடுகள் கட்டும் நேரத்தில்,



1. எண்ணூரில் 'காற்றடைத்த கல்' தயாராகும் தொழிற்சாலை.
2. பாளமாக வார்க்கப்படுகிறது கலவை. ரசாயன மாற்றம் ஏற்பட்டுக் 'காற்றடைத்த கல்' ஆகிறது.
3. அடி முதல் நுனிவரை செல்கிரீட்.
4. செல்கிரீட் கொண்டு கட்டும் கட்டட வேலையைப் பார்வையிடுகின்றனர், பிராஜெக்ட் ஆபீசர் திரு நடராஜனும் ரசாயன எஞ்ஜினியர் திரு ரத்தினமும்.

அந்த அளவு கொத்தனார்கள், நான்கு வீடுகள் கட்ட முடியும் என்கிறார்கள். சித்தாள்கள் திறன், மூன்று மடங்காகிறதாம். நேரமும் முயற்சியும் குறைவானால் சிக்கனம்தானே. அது மட்டும் அல்ல. பதினைந்து செங்கல் அடுக்கும் இடத்தில் ஒரே ஒரு செல்கிரீட் வைத்துவிடலாம் என்றால் அந்த அளவு கன

ணும்பும் சிமெட்டிச் சாந்தும் மிச்சம்தானே. இப்படி யெல்லாம் கவனிக்கும் போது, மொத்தக் கட்டடச் செலவு குறைகிறதாம்.

இதோடு, வேறு சில வசதிகளும் செல்கிரீட் தயாரிப்பில் உள்ளன. இவற்றை, மரத்தைப் போல ரம்பத்தால் அறுக்கலாம். இதில் ஆணி அடிப்பதும் எளிது! காலண்டர் பிரியர்களுக்கு யோகம்தான் !

இன்னும் சில மாதங்களில், மின் தடை நீங்கினால், மூன்று ஷிப்ட்கள் பணியாற்றினால், தயாரிப்பு அதிகமாகி, தயாரிப்புச் செலவு குறையும் என நிருவாகி திரு நடராஜன் நம்புகிறார்.

இந்தத் தொழிற்சாலைக்கு நேர் எதிரில் உள்ளது எண்ணூர் அனல் மின் நிலையம். அங்கே தினசரி டன் கணக்கில் வெண் சாம்பல் வீணாகி, கடலில் கொட்டப்படுகிறது. Fly ash என்னும் இந்த மென்சாம்பலை மணலுக்குப் பதில் பயன்படுத்தி, செல்கிரீட் தயாரித்துப் பார்த்த போது அது உறுதியாக இருக்கக் கண்டார்கள். தயாரிப்புச் செலவு மேலும் குறைய இது உதவலாம்.

அனல் மின் நிலையத்தில் வீணாகும் அத்தனை சாம்பலையும் செல்கிரீட் தயாரிப்புக்குத் திருப்பும் பூர்வாங்க வேலைகளில் இப்போது நிர்வாகம் ஈடுபட்டுள்ளது என்று அறிகிறோம்.

வெறும் கல் தவிர, கட்டட வேலைக்குப் பயன்படும் லிண்டல், சன்ஷேட், கான்கிரீட் கூரை தளம், அடித்தளம் ஆகியவையெல்லாம்கூடத் தயாரிக்கும் முயற்சியில் நம் இன்ஜினியர்கள் ஈடுபட்டிருக்கிறார்கள்.

கடலருகே தயாராகும் இந்தப் புதுமைக் கட்டடப் பொருள் விரைவில் நாடெங்கும் பரவுவதோடு கடல் கடந்தும் செல்லலாம் ! மிதக்கக் கூடியதுதானே செல்கிரீட் !

— தம்பி சீனிவாசன்

# கலை முற்றுகை!





ரைபுக்யூ சங்கீத, நடனம் கி.பி. 570ம் நூற்றாண்டிலிருந்து ஜப்பானில் வளர்ந்து வரும் கலைகள். 'ரைபுக்யூ' சங்கீதத்துக்குப் பயன்படுத்தும் சங்கீதக் கருவி 'ஷாஸின்' பாம்பின் தோலிலிருந்து தயாரிக்கப்பட்டு, மூன்று தந்திகள் கொண்டது. இசை கேட்டுப் பாம்பு படமெடுத்து ஆடுவது போல இவர்களது இசைக்கு ரசிகர்கள் ஆடுவது அதிசயமில்லையே! டாக்டர் ராகவன் நம் கர்நாடக இசை ராகங்களோடு ஜப்பானிய இசை ஒன்றுபடுவதை அருகிலிருந்த ஜப்பானியப் பிரதிநிதிகளிடம் சொல்லிக் கொண்டிருந்தார்.

தலையிலே மூங்கிலில் தயாராகி வண்ணப்படுத்திய தாமரைப் பூவைச் சுமந்து வண்ணப் பட்டாடையோடு இரு பெண்மணிகள் 'புட்சாடகி' என்ற நடனம் ஆடி வந்தனர், வண்ணப் பதுமைகள் ஆடுகின்றனவோ என்று எண்ணும்படி. நான்கு பெண்கள் 'ஜிஜு-யா' என்ற ஜப்பானிய நடனத்தை ஆடிக் கிறங்க வைத்தனர்.

செம்படவனாகவும், செம்படவப் பெண்ணாகவும்வந்த இரு ஜப்பானியப் பெண்கள் கையில் துடுப்பும், கூடையும் வைத்துக் கடலில் மீன் பிடித்து வாழும் செம்படவர்களின் வாழ்க்கையைப் படம் பிடித்துக்காட்டி விட்டார்கள்.

ஜப்பானியர்களின் தற்காப்பு யுத்தமாகிய 'கராத்தே'யை சிஹாய் க்யான் என்பவர் நிகழ்த்திக் காட்டினார்.

'ஹாஸ்'யான காதல் நடனம் 'ஹயா அமாகா' வோடு இந்தச் சங்கீத, நடன முற்றுகை முடிவுற்றது.

''பாரத நாட்டுக்கும் ஜப்பானுக்கும் பன்னெடுங் காலமாகக் கலாசாரத் தொடர்பு உண்டு. இந்தக் கலாசாரத் தொடர்புப் பரிவர்த்தனை முற்றுகை அடிக்கடி நிகழும்!'' என்று ஜப்பானிய கான்சல் ஜெனரல் இவ்விழாவின்போது அறிவித்தார். வரவேற்கலாம்.



படங்கள் :

- ☐ நூபாபூஷி நடனம் - காதலில் ஏமாற்றம்.
- ☐ ஜப்பானிய 'காஸேகாகே' துணி நெய்யும் நடனம்.
- ☐ மூன்ஜூர் (தொப்பி) நடனத்தில் உணர்ச்சிமயமான கட்டம்.

— பி. எஸ். எம்.

# இலவசம்!




## புத்தம் புதிய போர்ஹென்ஸ் புத்தகம்—'பற்களேயும் ஈறுகளேயும் பராமரிக்கும் முறை'.

இந்த விவரமான வண்ணப் புத்தகத்தை இலவசமாகப் பெறுங்கள்! இன்றே இக் கூப்பனே அனுப்புங்கள்.

மானோலா டென்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை எண் 10031, பம்பாய் 1.

''பற்களேயும் ஈறுகளேயும் பராமரிக்கும் முறை'' என்னும் போர்ஹென்ஸ புத்தகத்தின்* ஒரு பிரதியை இலவசமாக எனக்கு அனுப்பவும். தபால் செலவுக்காக 25 காசு தபால் தலை அனுப்பியுள்ளேன்.

K 6 BA

பெயர் ____________________ வயது __________

முகவரி ______________________________

______________________________

*எந்த மொழியில் புத்தகம் வேண்டுமோ, அதன் கீழ் கோடிடவும். ஆங்கிலம், ஹிந்தி, மராட்டி, குஜராத்தி, உருது, வங்காளி, அஸ்ஸாமி, தமிழ், தெலுங்கு, மலையாளம் அல்லது கன்னடம்.

**போர்ஹென்ஸ்** பல் வைத்தியர் ஒருவரால் உருவாக்கப்பட்ட பற்பசை

100F-152 TAM

# ஜாங்கோ ஜக்கு

கதை: குட்டி கிருஷ்ணன்

சித்திரம்: ராஜு

19

மாடியில் ஏதோ அரவம் கேட்கவே ஜக்கு அங்கு தான் சென்றிருக்கிறான் என்று புரிந்தது பி.க.பி.ம.வுக்கு. தட்டுத் தடுமாறிக் குளியலறையை அடைந்து கண்ணில் விழுந்த மிளகாய்ப் பொடியை அலம்பிக் கொண்டு பார்வையைச் சுமாராகத் திரும்பப் பெற்று, படியேறி மேலே வரச் சற்று நேரமாயிற்று அவனுக்கு. அதற்குள்....













குறுகலான பலகையை எடுத்துப் பக்கத்து வீட்டு மொட்டை மாடி மதிலுக்கும் இந்த வீட்டு மதிலுக்கும் இடையில் பாலம் சமைத்தான் ஜக்கு.


















பள்ளத்தைக் கண்டதும் குலை நடுங்கி, நிலை தடுமாறிய ஜக்குவின்....


.... உயிர் ஊசலாடியது!



ஜான்ஸி ராணி,
ஜோன் ஆஃப் ஆர்க்
போன்று உலக சரித்திரத்தில்
இடம் பெற்று,
பெண் இனத்துக்கு இந்தப்
புதுயுகத்தில் பெருமை
தேடித் தருபவர் இவர்.

# பாரதியை ஏமாற்றியவர்!



விண்வெளியில் உலவி வந்து புகழ்பெற்ற உலகின் முதல் பெண்மணி வாலன்டைனா. காதற் பெண்கள் மனம் வைத்தால் தாங்களே காற்றிலேறி விண்ணைச் சாடிவிடுவார்கள், கடைக்கண்ணால் பணித்துவிட்டு ஆடவர்கள் அதை நிறைவேற்றக் காத்திருக்கமாட்டார்கள் என்று நிரூபித்து விட்டார் வாலன்டைனா. பாரதியையே அவர் ஏமாற்றி விட்டார்!

இந்த ருஷ்ய நங்கை அண்மையில் புது தில்லியில் நடைபெற்ற குடியரசு விழா வைபவங்களில் பார்வையாளராகக் கலந்து கொண்டு மகிழ்ந்தார்.

முப்பத்தைந்து வயதே நிரம்பிய வாலன்டைனா ஒரு டிராக்டர் ஓட்டியின் மகள். தமது பதினாறாவது வயதில் ஒரு டயர் தொழிலகத்தில் வேலை பார்க்கச் சென்றார். அடுத்த ஆண்டே தம் தாயார் பணியாற்றி வந்த நூற்பு ஆலைக்குச் சென்றார். வேலை பார்த்தபடியே படித்துப் பருத்தி நூற்புத் துறையில் பட்டமும் பெற்றார். தகுதிக்குரிய உத்தியோகமும் கிடைத்தது.

1961ல் யூரிகாகரின் விண்வெளிப் பயணம் செய்து திரும்பி உலகை வியப்பில் ஆழ்த்திய போது வாலன்டைனாவுக்கு நாமும் விண்வெளிப் பயணம் மேற்கொள்ள முடியாதா என்ற ஆசை ஏற்பட்டது. கனவு காண்ப





தோடு நில்லாமல் கடிதம் எழுதினுர் உரியவர்களுக்கு. அவரது அளப்பரிய ஆர்வத்தைக் கடிதம் அதிகாரிகளுக்கு நன்கு உணர்த்தியிருக்க வேண்டும். வெண்வெளி வீராங்கனையாக அவரை ஏற்றுக் கொண்டு பயிற்சி அளித்தனர். 1963 ஜூன் 16ந் தேதி விண்வெளிப் பயணம் செய்த முதல் பெண் மணியாகித் தாய்நாட்டுக்குப் பெருமை தேடித் தந்தார். உலகை 70½ மணி நேரத்தில் நாற்பத்தெட்டு முறை சுற்றி வந்தார். அதே ஆண்டு சக வெண்வெளிப் பயணியான நிகோலயேவை மணந்தார். அடுத்த ஆறு ஆண்டுகளில் மேலும் படித்து விமானத் துறை பொறி இயல் நிபுணர் பட்டம் பெற்ருர்.

உலக சரித்திரத்தின் வீராங்கனைகள் வரிசையில் ஒருத்தியாகிவிட்ட வாலன்டைனு வீரத்தோடு அறிவிலும் உயர்ந்து பண்பிலும் கனிந்து அழகிலும் சிறந்து விளங்குகிருர் என்பதை இந்தப் படங்கள் நிரூபிக்கவில்லையா?

முன் பக்கம்

- மகள் எலினுவுக்கு அலங்காரம் செய்ய நிச்சயம் அவகாசம் உண்டு.
- விருந்தினர்களுக்குத் தேநீர் தயார்.

இந்தப் பக்கம்

- விண்வெளிப் பயணத்துக்குப் பயிற்சி.
- நெஞ்சு கொள்ளாத அளவு பதக்கங்கள்.
- உலகின் முதல் விண்வெளி வீரரும் (யூரி காகரின்) முதல் விண்வெளி வீராங்கனையும்.
- ஓய்வு நேரத்தில் மன அமைதி தருவது இன்னிசையே.





"இது க்ராய்லின் வண்ணப் பூச்சா என்ன?"

"ஓ! அதுவும் நானே தீட்டியதாகும்"

## இலவசம்!

எட்டு க்ராய்லின் வண்ணப் பாட்டில்கள் கொண்ட ஃபெமிலி பாக்கெட் வாங்கினால் ஒரு புது மாடல் ஃபோல்டிங் ப்ரஷ் மற்றும் டிசைன்கள் இலவசம்.

## கற்றிடுவீர்—க்ராய்லின் பெயிண்டிங்

இன்றே எமது தபால்வழி பயிற்சியில சேருவீர்

இருப்புள்ள - வரையே இச்சலுகை!

கேமல் க்ராய்லின் தயாரிப்பாளர்கள் உருவாக்கித் தந்திடும் ஒப்பற்ற வாய்ப்பு. ஓய்வு நேரத்தில் உங்கள் வீட்டில் இருந்தபடியே துணிகளில் வண்ணம் தீட்டும் கலையைக் கற்றுக் கொள்ளுங்கள் வண்ணம் தீட்டும் நுட்பத்தில் தேர்ச்சிபெற வகை செய்யும் ரூ. 12 மதிப்புள்ள வண்ணப் புத்தகம் உங்களுக்கு இலவசமாக கிடைக்கும். இத்தனைக்கும் ரூ.20 மட்டுமே!



பிரபல ஓவியரும் எங்களது கலை ஆர்ட் டைரக்டர் திரு. பால வாட் அவர்களின் நேரடிப் பயிற்சியும் கவனிப்பும் கிடைக்கிறது.

தொடர்பு கொள்க:
க்ராய்லின் கரஸ்பாண்டன்ஸ் ஸ்கூல்
கேம்லின் பரா. லி.,
ஜே. பி. நகர்,
பம்பாய்-59




camel
Crylin ®
COLOURS



VISION 721 TM

## இதுவரையில் :

**மோ**கனசுந்தரமும் பைரவியும் ராகமும் நாதமும் போல் மனமொத்த தம்பதிகளாக வாழ்ந்து வருகையில் போலீஸ் உயர் அதிகாரியான மோகனசுந்தரம் கடமையாற்றுகையில் தன் காலை இழக்க நேரிட்டது. பென்ஷனும் பண்பான பேச்சும் அவனுக்கு இதற்குப் பிரதியாகக் கிடைத்தன. ஆனால் அவன் ஓடி ஆடித் திறமையைக் காட்டி வந்த உலகம் இனி அவனுக்கில்லை என்றாகி விட்டது. சக்கர நாற்காலியில் அமர்ந்து வீட்டின் நான்கு சுவர்களுக்கிடையில் வளைய வந்தான். புத்தகங்களே உற்ற தோழர்களாயின பொழுதைப் போக்க. வாழ்க்கைச் செலவை ஈடுகட்ட பென்ஷன் போதாதாகையால் பைரவி வேலை தேடிக்கொண்டாள். கணவனையும் கருத்தூன்றிக் கவனித்துக் கொண்டாள். காரியாலயத்தில் செய்தவை போக மிச்சமிருக்கும் வேலையை வீட்டுக்குக் கொணர்ந்து டைப் செய்வாள். டைப்ரைட்டர் சத்தம் மோகனசுந்தரத்துக்கு வேதனையாக இருக்கக் கூடாதென்று அவன் படுத்துக் கொண்டபிறகு டைப் அடிக்கும் வேலையை மாடியில் வைத்துக் கொண்டாள்.

திடீரென்று ஒரு நாள் அவர்களுடைய இனிய இரட்டைக் குரலிசையில் அபசுரம் தட்டியது — பைரவியின் ஒரு சிரிப்பு காரணமாக. மாடியில் காரியாலய விஷயங்களை டைப் செய்யும்போது சிரிப்பதற்கென்ன இருக்கிறது என்று நினைத்தான் மோகனசுந்தரம். அப்புறம் ஒரு நாள் அவள் சூடத் தவறிய மல்லிகைப்பூவும் சரியான காரண காரியமில்லாமல் மாடிக்குச் சென்ற 'ஆஷ்ட்ரே'யும் மோகனசுந்தரத்தை மேலும் குழப்பின.

"கடவுளிடம் உனது உடைந்த இதயத்தைக் கொடு அதை முழுமையாக்கித் தருவார். ஒரு பெண்ணிடம் உன் முழு இதயத்தைக் கொடு; அதை அவள் உடைத்துக் கொடுப்பாள்" — ஓர் அறிஞர் கூறிய இந்தக் கருத்து தன் விஷயத்தில் மெய்யாகி விடுமோ என்று அஞ்சத் தொடங்கினான் மோகனசுந்தரம்.

# மூன்று முடிச்சுக்கள்



**5**

**கே. பாலசந்தர்**

"**பை**ரவி... பைரவி... பைரவி..."

யாரோ இதயக் குகையிலிருந்து உரத்த சத்தமிட்டு அழைப்பது போன்ற ஒரு பிரமை....

கூடவே பைரவி ராகத்தின் இனிமை இன்று அபஸ்வரமாக எதிரொலிப்பது போன்ற ஓர் உணர்வு.....

ஏன் இந்தச் சலனங்கள்? ஏன் இந்தத் துடிப்புக்கள்?

புரியவில்லை; புரியவே இல்லை...

சுருக்கம் விழுந்த நெற்றிக் கீறல்களில் வியர்வைத் துளிகள் உடைபட்டு விரிந்து கோடுகளாய்ப் பரவுகின்றன. இடக் கரத்தால் தடவி விட்டவண்ணம் அண்ணாந்து கவனிக்கலானான் மோகன சுந்தரம்! தன்னை அறியாமல் ஒரு பெருமூச்சு நெடிதாகப் பிரிகிறது.

ஏதேதோ பேசி முடித்து ஒருவாறு நிலைக்கு வந்த திருப்பதியும் ஆண்டாளும் ஒருவரையொருவர் உற்றுக் கவனித்துக் கொள்கின்றனர். அவர்களுக்குள் ஒரு பிரச்னை. நேரங் கெட்ட நேரத்தில் வந்துவிட்டோமா? ஏன் இப்படி மோகன சுந்தரம் அலை மோதிய முகத்துடன் காட்சி தருகிறார்?

ஓ.... புரவி ஆட்டக் கலைஞரைப் பற்றிக் குறிப்பிட்டதும் மனம் பேதலித்து விட்டதோ? புரவியாட்டம் என்பதே பொய்க்கால் ஆட்டம்! இவரும் கால் உடைந்து மெய்க் காலும் இல்லாமல் பொய்க் காலும் இல்லாமல் வண்டிச் சக்கரங்களையே கால்களாகக் கொண்டு நடமாடுவதை எண்ணி மனப் பேதலிப்பு கண்டு விட்டாரோ? என்ன காரியம் செய்துவிட்டோம்! ஒரு நிமிஷம் கால்களைப் பற்றிச் சிந்தித்துப் பண முடிப்பைப் பற்றிப் பேச்சைத் தொடங்கியிருக்கலாமே!

பொய்க்கால் குதிரைக் கலைஞருக்குப் பண முடிப்பு தருவதாக இருக்கிறோம் என்று குறிப்பிடுவதற்குப் பதிலாக, வேறு ஏதேனும் ஒரு பெயரைக் கூறி இருக்கலாம் அல்லவா ? இருக்கவே இருக்கிறார் கவிஞர் கார்மேகனார். எழுதி எழுதி ஓடாகிப் போய், இப்போது கையில் திருவோடு ஏந்திக் கொண்டிருக்கிற நிலையைக் கூறிப் பணம் கேட்டிருக்கலாமே !

''ஐயா! ஏதோ சிந்திக்கிறாப்பலே தெரியுது'' என்று இழுத்தாள் ஆண்டாளு. உடனே திருப்பதி அந்த இடைவெளியை வீணடிக்க விரும்பாமல், ''அதெல்லாம் ஒன்றுமில்லே. நம்ம புரவியாட்டக் கலைஞர் பற்றிச் சாருக்குத் தெரிஞ்சிருக்கணும். எவ்வளவு கொடுக்கலாம்னு யோசனை பண்றாரு!'' என்று கூறி முடித்தான்.

''ஆமாம்! எவ்வளவு கொடுக்கலாம்னுதான் யோசனை பண்ணுகிறேன்...'' அழுத்தம் திருத்தமாகப் பற்களைக் கடித்தவாறு கூறினான் மோகனசுந்தரம்.

எவ்வளவு கொடுக்கலாம்?

பணமா?

அறையா ?

திருப்பதியின் முகத்தில் அசடு வழிந்தது.

''மன்னிக்கணும்! ஏதோ மனக் குழப்பத்திலே இருப்பது போல் தோன்றுகிறது...''

நாணல்போல் வளைந்தான் திருப்பதி. அது அவனுக்குப் பழக்கம் !

மோகனசுந்தரத்துக்கே அப்போது தான் தன்னுடைய நிலை புரிந்தது. இவர்கள் எதிரே தன் குழப்பத்தைக் காட்டிக் கொண்டோமே என்று நினைக்கிறபோது, வலிய ஒரு தெம்பை வரவழைத்துக் கொண்டு, ''ஆமாம்; ஆமாம்; என்ன பணம் தருவது என்று தான் யோசித்தேன். இப்போது கைவசம் பணமில்லே. என் மனைவி வந்தால்தான்! இன்னொரு நாளைக்கு மாலை வேளையில் வந்தால் வாங்கிக் கொண்டு போகலாம்!'' என்றான்.

இன்னொரு தடவை வரச் சொல்கிறார். அப்பொழுது எப்படியோ?

ஒரு குத்து மதிப்பாகத் தொகையின் அளவைத் தெரிந்து கொண்டால் எதற்கும் நல்லது.

கணிசமாக இருக்கும் என்றால் இன்னொரு முறை இந்த வீட்டின் படிகளில் ஏறி இறங்கலாம் !

அதற்கு டாக்ஸியிலேயே வரலாம்!

இதுதான் அப்போதைக்குத் திருப்பதியின் பிரச்னை. எழுந்தான்; இரண்டு அடிகள் எடுத்து வைத்தான்; நின்று திரும்பினான்.

''சுமாரா என்ன தொகை கொடுக்கப் போறீங்கன்னு தெரிஞ்சா......''

முடிக்கவில்லை; வார்த்தைகளை மட்டும் இழுத்தான்.

''வேறு வேலை இல்லையா உங்களுக்கு; வெளியே போங்கய்யா'' என்று காரசாரமான ஒரு பதில் கிடைக்கும் சூழ்நிலைதான் இது ! அந்த வார்த்தைகள் எழுப்பும் காற்று அலைகளின் வேகத்திலேயே 'வாசல் கதவைத் தாண்டிவிடுவான் திருப்பதி ! சில நேரங்களில் திருப்பதி நடப்பதேயில்லை ; காற்றே அடித்துச் சென்று விடும் ! இதுவும் அவனது வழக்கம் ! திருப்பதி எதிர்பார்க்கவேயில்லை ! மோகனசுந்தரத்



தின் வார்த்தைகள் நிதானமாக இருந்தன.

''கையிலே பணமே இல்லேன்னு ரெண்டு ரூபா கொடுப்பேன் ! இருந்தா இருநூறு ரூபாய் கொடுப்பேன்.....''

இப்பொழுது திருப்பதி குழம்பினான்.

''பார்க்கலாம்'' என்று சொன்னால் கூடத் தேவலே! இது கொஞ்சமும் நம்ப முடியாத 'கேஸ்!'

'வருகிறபோது அநியாயமாக டாக்ஸி யில் வந்து விட்டோம். போகிறபோது அரசாங்க பஸ்தான்' — என்பதுபோல் திருப்பதியை நோக்கினாள் ஆண்டாளு! இருவரும் விடை பெற்றுக்கொண்டு வெளியேறினர்.

மோகனசுந்தரத்தின் பார்வையில் அந்த 'ஆஷ்டிரே' பட்டது. மீண்டும் மனம் சாம்பலாகத் தொடங்கிவிட்டது.

ஏதோ ஒன்று புரிந்துகொள்ள முடியாத நிலையில் புகைகிறது என்கிற அளவில் ஒரு சிறு பொறி மனத்தில் கனியத்தான் செய்தது. இதை வெளியில் காட்டிக் கொள்வதைவிடக் கண்டு பிடிப்பது நல்லதாகத் தெரிந்தது.

ஆமாம் ; மனக் குழப்பத்துடன் காணப்படுவதே தன்னைக் காட்டிக் கொடுப்பதற்கு ஒப்பாகவில்லையா ? கேவலம் இந்தப் பண முடிப்புத் தம்பதிகளே தன் முகத்தைப் பார்த்து ஏதோ குழப்பமாக இருப்பதாகக் கூறினார்களே! அவ்



வா றிருக்கப் பைரவி புரிந்து கொள்ள மாட்டாளா ?

சே, பைரவி எதையும் மனத்தில் வைத்துக் கொள்ளத் தெரியாதவள். அப்படி அவள் புரிந்து கொண்டிருந்தால் முகத்துக்கு முகமாகக் கேட்டுவிட்டிருப்பாள். இத்தனை நற்குணங்களை உடைய பைரவி பற்றி ஏன் தான் இந்த அலைபாய்கிற சிந்தனை முகிழ்த்ததோ ? எல்லாம் அந்தச் சிரிப்பொலி! சிரிப்பொலி.... பாழும் சிரிப்பொலி !

சிரிப்பொலி சாதாரணமான ஒன்றாகவே இருந்துவிட்டுப் போகட்டும் ! மல்லிகை பற்றியதும் மறதியாக இருந்து விட்டுப் போகட்டும் ! ஆனால் இந்த ஆஷ்ட்ரே... உச்ச கட்டமாக அமைந்து விட்டதே !

இது எப்படி மாடிக்குக் கால் முளைத்துச் சென்றது ? யார் எடுத்துக் கொண்டு போய் வைத்திருப்பார்கள்? வேலைக்காரி அஞ்சலை இவ்வாறு செய்திருந்தால், இதனை எடுத்துக் கொண்டு வந்து இங்கு வைக்கிறபோதே அவள் அதைக் கூறியிருக்கலாம் அல்லவா ? படுக்கை அறைக்கு அவள் தேடப் போவானேன்? நேரே மாடிக்குச் சென்று எடுத்துக் கொண்டு வர வேண்டியது தானே? பின்? உண்மை என்ன ?

பைரவிதான் எடுத்துச் சென்றிருக்க வேண்டும் ! ஏன் எடுத்துச் சென்றாள்? அதுதானே புரியாத புதிராக இருந்து மனத்தைப் போட்டுக் குட்டையாகக் குழப்புகிறது !

**பொ**ழுது விடிவதும் ஒன்றுதான்; மாலை மறைவதும் ஒன்றுதான். மோகனசுந்தரத்தைப் பொறுத்தவரை வெளிச்சம் ; இருள் — எல்லாம் அந்த வீட்டின் கீழ்ப் பகுதிக்குள் அடங்கிய சுவர்களுக்குள் !

மாலை வருகை தரவிருக்கிறது என்பதைக் கடிகாரம் அறிவித்தது. மணி நாலரை.

கதவு தட்டும் ஓசை கேட்டது. வேலைக்காரி அஞ்சலை ஓடிச் சென்று கதவைத் திறந்தாள். யாரோ எவரோ என்று எண்ணி எட்டிப் பார்த்தான் மோகனசுந்தரம். வேறு யாருமில்லை. பைரவிதான் நுழைந்து கொண்டிருந்தாள்.

ஏன் இன்று இவ்வளவு சீக்கிரம் வந்து விட்டாள் ? வழக்கமாக ஏறத்தாழ ஆறு மணி சுமாருக்கு வருகிறவள் முன்பாகவே வந்து விட்டாளே! ஒரு வேளை சீக்கிரம் வேலை முடிந்திருக்கும்.

சீக்கிரம் வரக் கூடாதா? சின்ன விஷயம்தான். இதைக்கூட எண்ணிக் குழப்பிக் கொள்ள வேண்டுமா இந்தப் பாழும் மனம் ? சந்தேகம் முளைக்கத் தொடங்கி விட்டால் பிறகு அதனைக் கிள்ளி எறிவது என்பது பெருங்கஷ்டம் என்கிறார்களே, அது முழுக்க முழுக்க உண்மை!

பைரவி அறையினுள் நுழைந்தாள். எப்போதும்போல் களையாகவே காணப்பட்டாளேயொழிய களைப்பாகக் காணப் பட்டாளில்லை.

கணவனைக் கவனித்த பைரவி, '' பகல் தூங்கவில்லைபோலத் தெரிகிறது'' என்றாள். அவளுடைய குரலில் கனிவு இருந்தது.

மோகனசுந்தரம் போலியான புன்னகையை உதிர்த்து, ''தூக்கம் வரவில்லை'' என்றான். ''ஆமாம் ; இன்றைக்கு ஏன் இவ்வளவு சீக்கிரம் வந்து விட்டாய்?'' என்று வினவினான்.

'ஏன் வரக்கூடாதா?' என்பதுபோல் நோக்கினாள் பைரவி. பிறகு ஒருவாறு தன்னைத் தேற்றிக் கொண்டு காரணத்தை விளக்கினாள்: ''ஒண்ணுமில்லே. என் ஆபீஸிலே வேலை பார்க்கும் சிநேகிதி ஒருத்தியின் தங்கைக்குக் கல்யாணம். காலையிலே முகூர்த்தத்துக்குக்கூடப் போகலே. ரிஸப்ஷனுக்காவது போகலாம்னு எண்ணிச் சீக்கிரம் வந்துட்டேன்.''

''கல்யாணம் எந்த இடத்துலே ?''

''வில்லிவாக்கம்.''

'' அவ்வளவு தொலைவிலா ?''

'' வில்லிவாக்கம் ஒரு தொலைவா ? எந்த நேரமானாலும் வந்துவிடுவேன். கூட நாலைந்து சிநேகிதிங்க வர்றாங்க !''

மோகனசுந்தரம் தலையசைத்தான்.

பைரவியும் முகம் கழுவி அலங்காரம் செய்து கொள்ளப் புறப்பட்டாள்.

ஒரு காலத்தில் எது ஒன்றுக்கும் மனைவியுடன் புறப்பட்டுச் சென்றது நினைவுக்கு வந்தது. ஒரு திரைப்படம் பாக்கியில்லாமல் அவர்கள் பார்ப்பார்கள் ! இப்போது.......

பைரவி திரைப்படத்துக்கே செல்வதில்லை. ஓரிரு சமயங்களில், '' ஏன், பைரவி ! உனக்கு விருப்பமானால் நீ மாட்னிக்குச் சென்று வரலாமே !'' என்று மோகனசுந்தரம் சொல்வான். பைரவி அறவே மறுத்து விடுவாள். இப்படி ஒரு மனைவியா ? அப்போது மோகனசுந்தரம் கண்ட மகிழ்ச்சிக்கு எல்லையில்லை என்றுதான் சொல்ல வேண்டும்.

ஏதோ சிநேகிதியின் வீட்டுத் திருமணம். முறைப்படி அவள் செல்லத் தானே வேண்டும் ?

அலங்கரிக்கப் பெற்ற திருவாரூர்த் தேரைப்போல் அழகாக அறையினுள் நுழைந்தாள் பைரவி. அவளை இன்

# ஓடுகிற ஆறு எப்போதும் ஓடிக்கொண்டே இருக்குமா?

ஓடும் நதியின் திசை திரும்பலாம். வெள்ளப் பெருக்கால் கரை உடையலாம். தண்ணீரே வற்றிப் போனாலும் போகலாம். வாழ்க்கையும் அப்படித்தான். ஆற்றில் அணைகள் கட்டுவதைப் போல, வாழ்வில் ஏற்படக்கூடிய திருப்பங்களைச் சமாளிக்க, உங்கள் குடும்பத்திற்குத் தகுந்த பாதுகாப்பு அளிக்க ஒரு முழு ஆயுள் என்டோமென்ட் பாலிசி (Whole Life Endowment Policy) எடுங்கள். மிகச்சிறிய பிரீமியங்கள் கட்டி மிகப்பெரிய காப்புத் தொகையை அடைவதற்கு இப்பாலிசிதான் சிறந்தது. மூன்றுவித முழு ஆயுள் அஷ்யூரன்ஸ் பாலிசிகள் உள்ளன. விவரங்கள் அறிய அருகிலுள்ள ஆயுள் இன்சூரன்சு அலுவலகம் அல்லது ஆயுள் இன்சூரன்சு முகவரிடம் விசாரியுங்கள்.



**ஆயுள் இன்சூரன்சு போல ஆதரவு தருவது எதுவுமே இல்லை**

EP.LIC.38.72

றைக்கெல்லாம் பார்க்கலாம் போலத் தோன்றிற்று மோகன சுந்தரத்துக்கு ! கொள்ளையழகாக விளங்கினாள். வெகு நாட்களுக்குப் பிறகு அவள் இப்படி அலங்காரம் செய்து கொண்டிருந்தாள். திருமணத்துக்காக வைத்த பரிசப் புடவை — பட்டுப் புடவையைக் கட்டிக் கொண்டிருந்தாள். நீல நிறப் புடவையும், நீல நிறச் சோளியும் அவளுடைய பொன்னிற மேனிக்கு எடுப்பாக இருந்தன ! இயற்கையாகவே பைரவி அப்சரஸ்போல் இருப்பவள். அலங்கரித்துக் கொண்டபிறகு சொல்ல வேண்டுமா ? பொற்குடத்துக்குப் பொட்டு வைத்தது போலத்தான் !

தன்னை வெகுவாக ரசிக்கிறார் கணவர் என்று தெரிந்து நாணித் தலை குனிந்து முறுவலித்துக் கொண்டாள் பைரவி.

"நேரமாகிறது பைரவி !" என்றான் மோகனசுந்தரம்.

"ஆமாம்; எனக்குச் சாப்பாடு எப்படி ?" என்று கேட்க வாய் திறந்தவன், சொற்களை விழுங்கி மௌனம் சாதித்து விட்டான். ஏற்பாடு என்ன என்பதைப் பைரவியின் வாயால்தான் கேட்போமே! ஏற்பாடுகளைச் சொல்லி விட்டுச் செல்கிறாளா, அல்லது பேசாமல் போய்விடுகிறாளா என்பதைத்தான் கவனிப்போமே !

பைரவி மெல்ல அருகே வந்து நின்றாள். "இன்னிக்கு மட்டும் என்னை நீங்க மன்னிக்கணும்."

"என்ன பைரவி ?"

"இக்கட்டான இந்த நிலையில் உங்களுக்குச் சாப்பாட்டுக்கு என்ன செய்யறதுன்னுதான் புரியலே. காலையிலே நான் முகூர்த்தத்துக்குப் போக முடியாமல் போனதற்கும் இதுதான் காரணம்."

"அதுக்காக இப்ப என்ன செய்ய முடியும்? ஏதாவது 'அட்ஜஸ்ட்' பண்ணிக்க வேண்டியதுதான்."

"இந்த ஒருவேளைக்கு மட்டும் அஞ்சலையை ஹோட்டலுக்கு அனுப்பிச் சாப்பாடு கொண்டு வரச் சொல்லிடறேன்."

ஒரு நிமிடம் மனைவியைக் கூர்ந்து கவனித்தான் மோகனசுந்தரம். தன் கையால் சமைத்துப் போடுவதில்தான் தனியான இன்பம் இருக்கிறது என்று கூறியவளாயிற்றே பைரவி ! என்ன செய்வது ? அசந்தர்ப்பம் !

"ஆகட்டும், பைரவி !" என்றான் மோகனசுந்தரம்.

"இன்றைக்கு ஒரு நாளாவது உங்களுக்கு சேஞ்சாக — ஒரு மாற்றமாக இருக்கட்டுமே! நான் செய்யும் சமையலிலிருந்து — " சொல்லிவிட்டுச் சிரித்தாள் பைரவி.



## 'ஹாய்'யாக இருக்க !

உங்கள் ஓய்வு நேரத்தை மற்றவர்கள் பகிர்ந்து கொள்ளாதவாறு பார்த்துக் கொள்ளுங்கள். அப்பொழுதுதான் நீங்கள் ஓய்வாக இருக்க முடியும். -காரனேட்-பிரின்ஸ்

"உனக்கும்தான் இன்றைக்கு ஒரு சேஞ்சாக இருக்கப் போகிறது — நீ செய்யும் சமையலிலிருந்து...." என்று சொல்லிவிட்டு அவனும் சிரித்தான் ! தனது வார்த்தைகளிலே ஏதோ ஓர் அர்த்தத்தைக் காலம் கடந்து புரிந்து கொண்டவன்போல் சிரிப்பை நிறுத்திக் கொண்டான்.

பைரவி வேலைக்காரி அஞ்சலையை அழைத்தாள். அவளிடம் பணத்தைக் கொடுத்துக் கணவனுக்கு ஆக வேண்டியவைகளைக் கவனிக்குமாறு உத்தரவு பணித்தாள்.

"பைரவி! கல்யாணத்துக்கு எதுவும் பிரசண்டேஷன் பண்ணலியா?" என்றான் மோகனசுந்தரம்.

பைரவியும் சிரித்துக் கொண்டே, "ஆபீஸ் சிநேகிதிகள் ஆளுக்குப் பத்து ரூபாய் போட்டுக் கேட்டுக் கொண்டதை வாங்கிக் கொடுக்கிறோம்" என்றாள்.

"கேட்டுக்கொண்டதை என்றால்...?"

"மணப் பெண் விரும்பியதை !"

"என்ன விரும்பினாள்? நானுந்தான் அதைத் தெரிந்து கொள்ளுகிறேனே !"

பைரவி சிரித்துக் கொண்டே சொன்னாள் : "வெள்ளியில் ஒரு சோப்பு டப்பி; பிறகு....."

"பிறகு?"

"கல்யாணப் பெண்ணின் கணவர் ஒரு செயின் ஸ்மோக்கராம். அதனால் ஃபேஷனைப் பார்த்து ஒரு சிகரெட் லைட்டர்."

சிகரெட் லைட்டரிலிருந்து ஆஷ்டிரேவுக்கு மனக் குரங்கு தாவியது !

உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டான் மோகனசுந்தரம். பிறகு, "சரி, சரி ! நேரமாகிறது. நீ புறப்படு!" என்றான்.

பைரவியும் கணவரிடம் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டாள்.

பைரவி சென்று வெகுநேரம் வரை அதே இடத்தில் இருந்து கொண்டு சிந்

தனையுடன் போராடிக் கொண்டிருந்தான் மோகனசுந்தரம். வேலைக்காரி அஞ்சலை சாப்பாட்டுக் காரியருடன் வந்து நின்ற போதுதான் நினைவு திரும்பியது. விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன.

''எசமான்....! ஹோட்டலுக்குப் போயிட்டு வர்றேன்!'' என்ருள் அஞ்சலை. மோகனசுந்தரமும் தலையசைவின் மூலம் விடை தந்தான்.

ஹோட்டல் சாப்பாடு! இதுவரையில் காணுத ஒரு திருப்பம்!

மாடிக்குச் சென்று அறைகளைச் சோதனையிடலாம் போல் தோன்றியது மோகனசுந்தரத்துக்கு. ஏனே அப்படியெல்லாம் செய்து பார்ப்பதன் மூலம் ஒரு நிறைவு கிடைக்காதா என்று மனம் ஏங்கத்தான் செய்தது. பைரவியை நாம் அவசியமில்லாமல் சந்தேகிக்கிறோம் என்ற முடிவு ஏற்படாதா என்று இதயம் தவித்தது.

மாடிக்கு எவ்வாறு செல்வது?

பரணையை அண்ணாந்து கவனித்தான். ஊன்றுகோல்கள் பரணையில் இருந்தன. அவற்றைத் தாங்கி அசிங்கமாக நடப்பது பைரவிக்குத் துப்புரவாகப் பிடிக்கவில்லை என்பதனால்தானே அவை பரணைக்கு ஏறிவிட்டன! எப்படி எடுப்பது? வேலைக்காரியை விட்டு எடுக்கச் சொல்லலாமா? நாளைக்கு இது பைரவிக்குத் தெரிந்துவிட்டால்? தன்னுடைய அநாவசியமான குழப்பம் காரணமாக மனைவியின் மனமுடைந்து போகுமாறு ஆகிவிடக் கூடாதல்லவா?

ஆனாலும் மாடி அறைகளை ஆராய்ந்தால் தேவலாம் போலத் தோன்றுகிறதே! அதற்கு என்ன வழி?

மாடியில் ஏதாவது விசித்திரமான சூழ்நிலைகள் தோன்றுகின்றனவா என்று அஞ்சலையிடம் பார்த்துவிட்டு வரச் சொல்லலாமா?.... சீச்சீ!.... எவ்வளவு கேவலம்!

அஞ்சலை பிறகு தன்னை அரையணுவுக்குக்கூட மதிக்க மாட்டாள்!

சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டான். அப்போது விரலில் அணிந்திருந்த மோதிரத்திலிருந்து பிரதிபலித்த ஒளிக் கற்றை அவனது கண்களில் பட்டது! திருமணத்தின் போது மனைவியின் கையால் அணிவிக்கப்பட்ட மோதிரம் அது!

சிகரெட் புகைச் சுழற்சியினூடே சிந்தனை ஒரு புதிய கோணத்துடன் சுழலத் தொடங்கியது. 'ஏன் இப்படிச் செய்து பார்த்தால் என்ன' என்கிற கேள்வியும் எழுந்தது. இவ்வாறு செய்வது அநாகரிகமானது என்று தெரிந்தும் ஏனே 'செய் செய்' என்று மனம் தூண்டி அலைத்தது. செய்துதான் பார்ப்போமே என்கிற ஒரு சமாதானம் மோகனசுந்தரத்துக்கு எழுந்தது. இதன் மூலம் ஒரு புதிய — விசித்திரமான துப்பு கிடைக்காதா என்று அந்தப் பாழும் மனம் எதிர்பார்க்கத்தான் செய்தது. அன்புக் கணவனாக இருந்தது போய் — அலைமோதுகிற சந்தேகக் கணவனாக மாறி — இப்போது துப்பறிகிற கணவனாக மாறிவிட்டோமே என்று எண்ணுகிறபோது யாருக்குத்தான் வேதனையாக இராது?

துப்பறிகிற சிந்தையொன்றும் மோகனசுந்தரத்துக்குப் புதியதல்லவே! அது அவனுடைய முந்தைய தொழில் நினைவு! போலீஸ் அதிகாரிகளுக்கு இயல்பாகவே சேர்ந்துவிட்ட தொழில் சொத்து!

விரலிலிருந்த மோதிரத்தைக் கழற்றினான். ஒரு முறை வெறுமையான சிரிப்புடன் நோக்கிக் கொண்டான். ஒரு பவுனில் வேலைப்பாடுகளுடன் கூடி அமைந்திருந்தது அந்த மோதிரம். நடுவே 'B' என்ற ஆங்கில எழுத்து — பைரவியின் தலை எழுத்து!

மெல்லச் சக்கர வண்டியை நகர்த்திக் கொண்டு வராந்தாவுக்கு வந்தான். அங்கிருந்து மாடியைக் கவனித்தான். எட்டுகிற தூரத்தில் மாடியில் ஓர் அறையின் சாளரம் இருந்தது. அது பைரவியின் 'டைப்' செய்யும் அறையல்ல. ஆனாலும் அந்த அறையில்தான் அவளுடைய துணிமணிகள் — பீரோ இத்தியாதிகள் இருந்தன!

அந்த அறைக்கு நேர் எதிரான அறைதான் அவளுடைய 'டைப்' செய்யும் அறை. அங்கிருந்து புறக்கடை நோக்கிச் செல்லும் வராந்தா. வராந்தாவை ஒட்டினாற்போல் இறங்கும் இரும்பால் செய்த பழங்காலச் சுழற் படிக்கட்டு. அது புறக்கடைப் பக்கமாக அமைந்திருந்தது.

சக்கர வண்டியை இன்னும் நெருக்கமாக நகர்த்திச் சென்ருன் மோகனசுந்தரம். ஒரு சக்கரத்தை இடக்கரத்தால் பலமாகப் பற்றிக்கொண்டு, மறு கரத்திலிருந்த மோதிரத்தைச் சாளரத்தை நோக்கிக் குறி பார்த்து எறிந்தான். அவன் வைத்த குறி என்றுமே தவறியதில்லை. மோதிரம் 'கிணங்' என்ற ஒலியுடன் அறையினுள் சென்று விழுந்தது.

மோதிரம், வைத்த குறி தவருமல் சென்றுவிட்டது!

இனி —

பைரவியின் மீது வைத்த குறி என்ன ஆகப் போகிறதோ?

வேலைக்காரி அஞ்சலையை அவன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். அப்போது —

தெரு வாசற்கதவை யாரோ திறப்பது தெரிய வந்தது. (தொடரும்)



# கண்ணாடியின்றி கண் பார்வை பெறலாம்!

**உங்களுக்கு இதைவிட மட்டற்ற மகிழ்ச்சி தரக்கூடிய செய்தியும் வேறு உண்டோ!**

**'காண்டாக்ட் லென்ஸ்'களை உபயோகியுங்கள்.**

இந்த 'காண்டாக்ட் லென்ஸ்'கள் கிட்டப்பார்வை, தூரப்பார்வை மற்றும் அஃபாகிக் (காடராக்ட் ஆப்ரேஷனுக்குப்பின்) கெராடோ கோனஸ், அனிஸோமெட்ரோபியா, அனிஸிகோனியா, பாலியோபியா, போன்ற பார்வை குறைபாடு உடையவர்களுக்கு மிகவும் சிறந்தது.

'காண்டாக்ட்லென்ஸ்'களை வெகுசுலபமாக நீங்களே உங்கள் கருவிழிகளில் பொருத்திக்கொள்ளலாம். . . கழற்றியும் விடலாம்—சில நாட்கள் பழகிய பின்! உங்கள் விழிகளில் பொருத்தப்பட்ட இச்சிறு 'காண்டாக்ட்லென்ஸ்'கள் மற்றவர்கண்களுக்கு தெரியாது. ஆகவே உங்கள் எழில் மிகு முகத் தோற்றத்தில் எவ்வித மாறுதலும் இல்லை!

**உங்கள் கண் வைத்தியரை ஆலோசனைக்கு அணுகுங்கள்**

மற்ற விபரங்களுக்கு: **ஆசியா காண்டாக்ட் லென்ஸ் லாபரெட்டரி**
லாபரெட்டரி : 13, கில்கிறிஸ்ட் அவென்யூ, ஹாரிங்டன் ரோடு, சென்னை - 31
அலுவலகம் : 5-G, வீரபத்ர அய்யர் தெரு, நுங்கம்பாக்கம், சென்னை-34

போன்கள் :
662600 82722 82595



---

CIBA

# சாதாரண சரும நோய்களுக்கு நிவாரணம்

# வயோஃபார்ம்

**க்ரீம்**

CIBA/VIO-69 TM


உங்கள்
சமையலை
ருசித்த பின்
கணவர் முகம்
சுளிக்கிருரா?


ஹிந்தாலியம் பாத்திரங்களை உபயோகியுங்கள்.
சீக்கிரம் அவர், உங்களை விட சமையலில் சிறந்தவர்
கிடையாது என்று புகழ ஆரம்பித்துவிடுவார்.
ஹிந்தாலியம்®
சிறந்த
இல்லாண்மைக்கு
ஓர் பேருதவி.
Sobhagya HAC-172 TAM
ஹிந்துஸ்தான் அலுமினியம் கார்ப்பொரேஷன் லிட்

# ராஜாஜியின் ஜெயில் டைரி

சாஸ்திரியாருக்கு இன்னும் குணமாகவில்லை. இப்போதுதான் வைத்திய சாலைக்குச் சென்றிருக்கிறார்.

எனக்கு அனுப்புவதாகச் சொன்ன வெண்ணெய் வந்திருக்கிறது. இங்கே எது தந்தாலும் கஞ்சத்தனம் அதிகம். அதனால் தினையளவாகக் கிடைத்தாலும் நாங்கள் அதை அதிகமாக மதித்துக் காப்பாற்றிப் பயன் படுத்துவோம். இங்கு வந்த பின் வெண்ணெயில் ஒரு குண்டூசி முனையில் நிற்குமளவுகூட வீணாக்காமல் உபயோகிக்கக் கற்றுக் கொண்டேன்.

இன்று பருக்களுக்காக ஐந்தாவது முறை மருந்து குத்தி வைத்தார்கள். இன்றுதான் அதிகபட்சமான அளவு மருந்தைக் குத்தினார்கள்.

நூல் நூற்றேன். சோக்கிரதர் நூலில் கொஞ்சம் மொழிபெயர்த்தேன். ராமாயணத்திலும் கொஞ்சம் படித்தேன். சீதையைத் தேடிச் சென்ற படலம் மிகுந்த சுவையுடையதா யிருந்தது.

இன்று மாலையில் சிறைக் குமாஸ்தா நான் ஊரிலிருந்து வரும் என்று எதிர் பார்த்த கடிதத்தைக் கொண்டு வந்து கொடுத்தார். ரங்கூனிலிருந்து என் பெண்களுடைய கடிதங்கள் அதில் வைக்கப்படவில்லை. கிருஷ்ணசாமியும் நரசிம்மனும் என் அண்ணாவும் எழுதியிருந்தார்கள். எனக்குக் கொடுக்கும் சர்க்கரையையும் வெண்ணெயையும் எப்படி உபயோகித்தேனோ, அப்படியே தான் இவைகளையும் பயன்படுத்தினேன். கடிதங்கள் வருவதற்கும் கட்டுப்பாடு இருப்பதால் எப்பொழுது வரும் என்ற ஆவல் அதிகமாக உண்டாகிறது. கடிதத்திலுள்ள ஒவ்வொரு வரியையும் நன்றாய் மென்று சுவைத்துக் கொண்டிருந்தேன்.

நான் சிறைக்கு வந்து இன்றுடன் ஒரு மாத காலம் ஆகின்றது. காலத்தின் மதிப்பு சிறையில் ஒரு விதமும், சிறைக்கு வெளியில் ஒரு விதமும் தான்.

## 1922 ஜனவரி.- 21உ

நேற்று மருந்து குத்தி வைத்ததால் தலைக் கனம் அதிகமாக இருந்தது. இன்று அதிக பலவீனமாக இருக்கிறது. ஒன்றுமே செய்ய இயலவில்லை.

## 1922 ஜனவரி. 22உ

ஞாயிற்றுக்கிழமை — இன்று மாலை கஞ்சி சாப்பிடும்போது ஈக்களுடன் ஒரே யுத்தம்தான் புரிந்தோம். ஈக்கள் தொல்லை ஒன்று. தினந்தோறும் குழம்பில் முள்ளங்கி இலையும், உடையாத முழுத் துவரையும்தான் போடுகிறார்கள், அந்தத் தொல்லை ஒன்று. ஈக்கள் நோயைப் பரவச் செய்யும். முள்ளங்கி இலையும் துவரையும் குடலைப் புண் செய்யும். இந்தக் காரணத்தால்தான் சிறையில் எப்பொழுதும் வயிற்று வலியும் உளைவும் அதிகமாக உள்ளன.

சுந்தர காண்டத்தில் எவை மிக அழகான பகுதிகளோ, அவைகளில் சில வற்றை நேற்றுப் படித்தேன். வீரனும் சுயநலமில்லாதவனும் விசுவாச முள்ளவனுமான லட்சுமணனிடம் சீதை காட்டிய அன்பு வெகு அழகாகக் கற்பனை செய்து வர்ணிக்கப்பட்டிருக்கிறது. அவனுடைய அன்பில் வாஞ்சையும் மரியாதையும் தாயுள்ளமும் காணப்படுகின்றன. இத்தகைய அழகிய



அன்பை ஹிந்துக் கவிஞர்தான் கற்பனை செய்ய முடியும்; வர்ணிக்கவும் முடியும். அதுபோலவே ஹிந்து கிரகஸ்தர்தான் அதை முற்றிலும் அறிந்து கொள்ளவும் முடியும்.

இன்று சுத்தமாக க்ஷவரம் செய்து கொண்டேன். அம்பட்டர் ஒரு கிழவர். அவருக்குச் சொந்த ஊர் திருப்பத்தூர். பொய்யாக வழக்குத் தொடரப்பட்டு, சேலம் ஜட்ஜு ஐந்து வருஷத் தண்டனை கொடுத்திருந்தார். பிறகு சித்தூர் ஜட்ஜும் பொய்யான வழக்கு ஒன்றில் மீண்டும் ஐந்து வருஷம் தண்டனை அளித்து விட்டார்.

அட்டைப்படக் கதை

# "அடல்ட்ஸ் ஒன்லி!"

மாலை வேளை.

காலையில் எழுந்தது முதல் மாலை அலுவலகம் முடிந்து தத்தம் இடங்களுக்குத் திரும்பும்வரை ஒவ்வொன்றிற்கும் 'கியூ'வில் நின்று வாழ்க்கையை நகரத்தின் பரபரப்போடு நெட்டித் தள்ளிக் கொண்டிருக்கும் சென்னை நகர ஆத்மாக்களுக்கு, அதுவும் என்போன்றோர்க்குச் சற்று ஓய்வு கிடைப்பது என்றால் அந்த மாலை வேளைதான். சென்னையிலே நெருக்கமாய் மனிதக் காளான்கள் பரவியிருக்கும் தங்கசாலைப் பகுதியில் பிரம்மச்சாரிகளுக்கெனவே அமைந்த ஒரு லாட்ஜின் மொட்டை மாடி.

அவள் எனக்கு எழுதிய அக் கடிதத்தை நான்காம் முறையாகப் படிக்கிறேன். முத்து முத்தான கையெழுத்துக்கள். மார்கழி இரவில் பகம்புல் வெளியில் கைகோத்து நிற்கும் பனித் துளிகள் போன்று வரிசையாக நிற்கும் எழுத்து முத்துக்கள்... அவள் உள்ளத்தின் உணர்ச்சி...இளம் இரத்தத்தின் சூடேற்றும் சொற்றொடர்ப் பகுதி.... அவள் என்னுடன் அறிமுகமாகி — முழுதாக இரண்டு மாதங்கள் ஆகவில்லை. அதற்குள் அவளிடமிருந்து இப்படியொரு கடிதமா? ஆழ்கடலின் அடிப்பரப்பில் நடக்கும் செயல்களைக்கூட உணர முடியும். ஆனால் இந்தப் பெண்ணின் மனத்தில்....!

கைப்பிடிச் சுவரைப் பிடித்துக் கொண்டு சாலையில் பார்வையை ஓட விடுகிறேன்; விடை தெரியாத மாணவன் தேர்வு நிகழும்போது அடிக்கடி தண்ணீர் வேண்டும் எனக் கேட்பது போல!

இருபது வயது வரையில் பெற்றோரின் நேரடிப் பார்வையில் திருநெல்வேலியில் படித்து வளர்ந்த அவள் சென்னைக்குப் புதிது. பெற்ற பட்டத்தாலும், பிறப்பால் பெண் என்ற காரணத்தாலும் கிடைத்த வேலையின் பொருட்டுச் சென்னை வந்து பணி புரியும் பாவையர் விடுதியில் தங்கியுள்ள அவள்... நான் வேலை பார்க்கும் ஆபீஸ் ரிஸப்ஷனிஸ்ட்!

ஜெஸ்மினு!...

நாகரிகமான பெயர். இப்பெயர் அவள் பெற்றோர் வைத்த பெயரா அல்லது அவளே வைத்துக்கொண்டாளா எனக்குத் தெரியாது. ஒடித்த மஞ்சளின் உள் இருக்கும் நிறம். நீவாமல் விட்டும் விடப்படாமலும் இருக்கும் கூந்தலை இரட்டைச் சடையாகப் பின்னிவிட்டு அதனிலே ஒற்றை ரோஜாவை இரண்டு இலைகளுடன் செருகியிருப்பது வர்ணனைக்கு அப்பாற்பட்டது. நெற்றியில் புரண்டு கொண்டிருக்கும் ஒன்றிரண்டு மயிர்க் கற்றைகளைத் தென்றலுக்கு இசையச் சோலையில் ஆடும் மலர்க்கொடி நடனத்துக்கு உவமித்தால் மிகையாகாது. சிறிது நீண்ட கழுத்து. நெஞ்சின்



மத்தியில் நுனியில் முடிச்சிடப்பட்ட ஒற்றைச் சங்கிலி. இரண்டாக வெட்டப்பட்ட தக்காளியின் உள் தோலின் நிறமொத்த செந்நிற இதழ்கள்... எடுப்பான நாசி... மேல் உதட்டினிலே மசி தெளித்தாற்போன்ற சிறு மச்சம். மல்லிகைப் பூவின் நிறத்தினை மங்கச் செய்யும் வெண்ணிறப் பற்கள். தெளிந்த ஆற்றோட்ட நடையில் தேர்ந்தெடுக்கப்பட்ட சொற்றொடர்களோடு ஆங்கிலப் பேச்சு... இது தான் ஜெஸ்மினா.

மு. கணேசன்

இந்த வர்ணிப்பு என் நண்பன் மோகனுடைய கைச்சரக்கு. அவனுக்குத்தான் செல்கிறது என்ற நினைப்பில் அவன் புகழ் பாடும் காகிதத்தை எனக்கு வந்த ஃபைலில் அனுப்பி வைக்க... நான் அதைப் படிக்க... அது மீண்டும் இப்பொழுது நினைவுக்கு வருகிறது. இப்படி வர்ணிக்கும் அளவுக்கு நான் அவளைக் கவனித்ததில்லை....

வரவேற்பு அறைக்குச் சிறிது பக்கத்தில் தானிருந்தது என் இருக்கை. தற்செயலாக நாங்கள் நேருக்கு நேர் சந்திக்கும் நேரத்தில் விளைவது புரியாத ஒரு நிமிடப் புன்னகை.

ஆனால் இன்று....

வழக்கம் போல் மாலை அலுவலகம் முடிந்ததும் வந்து கொண்டிருந்தேன். வரவேற்பு அறையைத் தாண்டியதும்....

''குமார்.... சார்.....!''

வீணையின் நரம்புகளை அதில் வல்லவன் நீவி விட்டது போன்ற இசையின் வெள்ளத்தை ஒத்த குரல். திரும்பினேன். ஜெஸ்மினா கையில் ஓர் அஞ்சலுறையுடன் நின்று கொண்டிருந்தாள்.

''என்ன வேண்டும், மிஸ் ஜெஸ்மினா....''

'' ஒரு சிறிய உதவி.... எனக்கு மிகவும் வேண்டிய ஒருவருக்கு ஒரு கடிதம் எழுதியிருக்கிறேன். மிகவும் அவசரம்... எனக்கு வேறு வேலை இருக்கிறது. தயவுசெய்து, 'மொபைலி'ல் போஸ்ட் செய்து விடுகிறீர்களா....?'' குழைந்தாள் அவள்—கூறவில்லை.

''ஓ! வித் பிளஷர்.....''

அவளிடமிருந்த அந்தக் கவரை வாங்கும் பொழுது, வேண்டுமென்றே தன் விரல்களை என் கையில் அழுத்தியவாறு கொடுத்தாள். நான் சற்று நெற்றியினைச் சுருக்கி அவளை நோக்கினேன். அவள் என்னை ஊடுருவது போல் பார்த்துக் கொண்டிருந்தாள்! சமதளத்தில் எங்கள் கண்கள் சந்தித்துக் கொண்டன. அவள் விழிகளை அதிக நேரம் நேருக்கு நேர் நோக்க எனக்குச் சக்தியில்லை. அவள் முகத்திலே அவள் ஏதோ கூற விரும்பும் எண்ணம் பரவிக் கிடப்பது எனக்குப் புரிந்தது.



'' சார்.....! முகவரி சரியாக இருக்கிறதா என்று.......''

வார்த்தைகளை வெட்டி வெட்டிச் சொன்னவன் முடிக்காமலேயே சென்று தன் இருக்கையில் அமர்ந்தாள். இந்த ஓரிரு நிமிட நிகழ்ச்சிக்குள் அவள் முகத்திலேதான் எத்தனை வியர்வை அரும்புகள்.... தங்கத் தாம்பாளத்திலே பன்னீர் தெளித்தாற் போன்று....!

பதற்றம் மிகுந்த அவளுடைய செயலுக்குக் காரணம் என் தோளில் நண்பன் மோகன் கைபட்டவுடன்தான் புரிந்தது.

'' என்னடா.... காதலுக்குப் பிள்ளையார் சுழி போட்டாகிவிட்டதா? அண்ணலும் நோக்க அவளும் நோக்க ஏதோ கடித மாற்று நடந்தது போலிருக்கிறது.... அந்தக் காலத்தில் அன்னத்தைத் தூது அனுப்பினார்கள். இந்தக் காலத்தில் காகிதம்தான் அன்னம்.... என்ன இருந்தாலும் நீ அதிர்ஷ்டக்காரன் தாண்டா.''

நீண்டதொரு சிரிப்பை உதிர்த்துவிட்டு, வரவேற்பு அறையை நோக்கிக் கனைத்த பிறகு சென்றுவிட்டான் மோகன்.

என்ன அர்த்தமில்லா உலகம் இது. ஒரு பெண்ணும் ஆணும் பேசிவிட்டால் காதல் தானா.....!

'மொபைல்' போஸ்ட் ஆபீஸ் வழக்கமாக நிற்கும் இடத்தினை நோக்கி நடைபோடத் தொடங்கினேன். ''முகவரி சரியில்லை என்று சொன்னாளே, ஒரு வேளை ஊர் பெயர் தப்பாக எழுதி இருப்பாளோ...? படித்தேன் முகவரியை. தூக்கிவாரிப் போட்டது எனக்கு. ஏனெனில், அந்த உறையில் எழுதப்பட்டிருந்தது என்னுடைய அலுவலக முகவரி. கூப்பிடும் தூரத்தில் இருக்கும் எனக்கு ஒரு கடிதமா.....? ஏதாவது அலுவலக இரகசியமாக இருக்குமோ.... சொல்ல முடியாமல் கடிதத்தின் மூலம் சொல்ல எண்ணுகிறாளா? பிரித்துப் பார்க்கிறேன் அதை....!

''........குமார்!''

தங்களை எப்படி விளிப்பது என விழிக்கிறேன். இருப்பினும் அடுத்த கடிதத்திலாவது, இதில் ''..........'' என விடப்பட்டுள்ள இடத்தில் 'அன்புள்ள' என்ற வார்த்தையை நிறைத்துக் கொள்ள அனுமதி அளிப்பீர்கள் என நம்புகிறேன்.

தங்களை என் இருக்கைக்கு எதிரில் கண்டது முதல் என்னுள் ஏதோ உணர்வு. எப்படி, ஏன் அவ்வெண்ணம் வந்தது என எனக்குப் புரியவில்லை. அதற்கு விடை நீங்கள் தான் கூற வேண்டும்.... உண்மையாகக் கூறப்போனால் என் மனம், என் உயிர் அனைத்தையும் உங்களுக்கு அளிப்பதற்குத் தயாராகி விட்டேன். ஏற்றுக்கொள்வீர்களா? தங்களின் பதிலில்தான் என் வாழ்க்கையைத் தொடங்க இருக்கிறேன். அன்புடன்

**ஜெஸ்மினா**

மிகவும் கச்சிதமாக முடித்திருந்தாள் அக்கடிதத்தை... காதல் கடிதத்தினை நேருக்கு நேர் கொடுத்த அவளுடைய துணிச்சல் உண்மையிலேயே பாராட்டுக்குரியதுதான்... அவள் என்னைக் காதலிக்கிறாள்; பழக விரும்புகிறாள்.

ஆனால் என் நிலை.....

எனக்கே விளங்காத ஒன்று. '' நீ அனுப்பும் பணம் போதவில்லை. கூட நூறு ரூபாய் அனுப்பினால் நலம்'' என்று மாதமிரு முறை வரும் என் அன்னையின் கடிதங்களை எத்தனையோ முறை வைத்துக் கொண்டு தவித்துக் கொண்டிருந்த எனக்குக் காதல் ஓர் அவசியத் தேவைதானா? அவள் மனதில் இப்பொழுதுதான் காதல் அரும்பப் பார்க்கிறது. அதனை மேலும் வளர விடுவது எனக்கும் அவளுக்கும் உகந்தது அல்ல. அப்படியே அவளைக் காதலித்தாலும் மனைவி என்ற நிலையை அவளுக்கு அளிக்க, என்று என் மூன்று தங்கைகளின் மணம் முடிகிறதோ அன்றுதான் இயலும். அதுவரையில் காத்திருக்க இயலுமா அவளால்..... காதலின் வேகத்தில் 'கண்டிஷனை' அவள் பொருட்படுத்தமாட்டாள்......

அவளுக்கு நான் பதில் எழுத வேண்டும். ஆனால் எப்படி எவ்வாறு எழுதுவது என்பதைப் பற்றிச் சிந்திக்கத்தான் என் வீட்டு மொட்டை மாடிக்கு வந்தேன்.

ஒரு முடிவுக்கு வந்தவனாக என் அறைக்குத் திரும்பினேன். நீண்டதொரு கடிதத்தை அவளுக்கு எழுதத் தொடங்கினேன்.

அன்புள்ள ஜெஸ்மினா...!

'அன்பு' என்ற சொல்லுக்குத்தான் இவ்வுலகில் எத்தனை பொருள். எத்தனை வடிவம். தாய் சேயிடம் காட்டும் அன்பு பாசம்.... நண்பர்களிடையே நிலவும் அன்பு நட்பு.... ஆண்டவன் மேல் பக்தன் காட்டும் அன்பு பக்தி..... பக்தன்மேல் ஆண்டவன் காட்டும் அன்பு அருள்..... இத்தகைய அன்புக்கு அப்பாற்பட்டது காதல்தான் என்றாலும்கூட அதை நீங்கள் மட்டுமே தேர்ந்தெடுத்துள்ளீர்கள்..... காதலுக்கு ஒருமை எதிரி..... ஒற்றுமை அவசியம்......

இப்பெரிய சென்னை நகரத்தில் தனிப் பறவையாகத் தாய்க் கூட்டிலிருந்து பறந்து வந்த சிட்டுக் குருவியை ஒத்தது உங்கள் நிலை. உங்களின் மீது உங்கள் பெற்றோர் காட்டும் அன்புக்கும் நம்பிக்கைக்கும் நீங்கள் எனக்கு எழுதிய கடிதத்தின் மூலம் செய்ய எண்ணும் நம்பிக்கைத் துரோகத்துக்கு நானும் காரணமாக அமைய விரும்பவில்லை.

பொருளாதாரப் பட்டதாரி நீங்களென மோகன் என்னிடம் முதலில் கூறினான். ஆனால் புத்தகத்தில் நாம் படிக்கும் பொருளாதாரம் நமக்கு வாழ்க்கையில் கைகொடுக்குமா என்பது சந்தேகம்தான். மூன்று தங்கைகளுக்கு மணம் முடிக்க வேண்டிய பொறுப்பு என் தலையின் மீதுதான் விழுந்துள்ளது.

காதல் முதலில் சுவைக்கலாம். இனிப்புக் கடை எறும்பு மாதிரி காதல். இனிப்புத் தேனைக் குடித்துக் குடித்து வண்டு அதே மயக்கத்தில் அத்தேனிலே விழுந்துதான் உயிரை விடுமாம்.

ஒரு பெண்ணும், ஆணும் திருமணத்துக்கு முன்பே ஒருவரையொருவர் சந்தித்துப் பழகுவது பிற்கால வாழ்க்கைக்குப் பெரிதும் துணை புரியும் என நீங்கள் வாதிடலாம். ஆனால் நாம் ஒருவருக்கொருவர் அலுவலகப் பணியாளர்களாக அறிமுகமாகி இரண்டு மாதங்கள் ஆகவில்லை. அதற்குள் தங்கள் வாழ்க்கையை என்னிடம் ஒப்படைக்கும் அளவுக்கு எப்படி

உறுதியான கட்டடங்கள். கிராமங்களில் - 2







மலிவுவிலை வீடு

கிராமங்களில் ஒரு புதிய புரட்சி

# சங்கர் சிமெண்ட்



பாறை போன்று உறுதி நிலைத்திருக்கக் கூடியது

ISI மார்க்குடன் உத்தரவாதம் உள்ளது



இந்தியா சிமெண்ட்ஸ் லிமிடெட், தன் பில்டிங், சென்னை-2

**25 ஆண்டுகளுக்கு மேல் நிலைத்து — இன்னும் வளர்ந்துகொண்டே போகிறது!**

இலவச தொழில்நுட்ப ஆலோசனைக்கு: சிமெண்ட் சர்வீஸ் பீரோ, 'குரோவ்' சென்னை -18

முடிவு செய்தீர்களென்று அறிய விழைகின்றேன். தங்கள் கடிதம் முதலில் சிரிப்பை அளித்துப் பின்னர் சிந்திக்க வைத்தது.

தங்களுக்கும் திருமணமாக விருக்கும் தம்பி தங்கைகள் இருக்கலாம். எவ்வளவுதான் சீர்திருத்தம் என்று தம்பட்டம் அடித்துக் கொண்டாலும் நாளை உங்கள் தங்கைகளை நோக்கி, ''அன்று ஓடிப்போனுளே அவளுடைய தங்கை.....'' என்றுதான் சமூகம் கூறும். தவருகப் புரிந்து கொள்ள மாட்டீர்கள் என்று எண்ணுகிறேன்.

நீங்கள் எனக்குக் கடிதம் எழுதலாம். நான் உங்களிடம் மனம் விட்டுப் பேசியிருக்கிறேன் இக் கடிதத்தில். அடுத்த கடிதத்தில் 'அன்புள்ள' எனத் தொடங்கி முடிவில் 'அன்புள்ள தங்கை' என முடித்து அதற்குக் கீழே கையெழுத்திடுங்கள். அதுவே என் வேண்டுகோள்...



தங்களின் திருமண அழைப்பிதழை ஒரு வேளை நான் இவ்வலுவலகத்திலிருந்து மாற்றுதல் வாங்கிச் சென்றுல்கூட அனுப்புவதற்காக இத்துடன் என் சொந்த ஊர் முகவரியையும் உடன் எழுதி உள்ளேன்.

தங்கைக்குத் திருமணம், அண்ணன் நான் இல்லாமல் நடக்காது என்பது என் எண்ணம். இன்று முதல் எனக்கு நான்கு தங்கைகள் — தங்களையும் சேர்த்து.

குமார்

கடிதம் ஒருவாறுக முடிந்தது.

மறு நாள்.

அலுவலகம் சுறுசுறுப்புடன் இயங்கிக் கொண்டிருந்தது. ஜெஸ்மின் அங்குமிங்கும் பார்வையைச் சுழலவிட்டபடி என்னையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவளுடைய ஒவ்வொரு செயலிலும் ஒரு பதற்றம் ஏற்படுவது எனக்குப் புரிந்தது. அவளை இன்னும் சோதிக்க விரும்பவில்லை.

வரவேற்பு அறையை நோக்கி நடந்தேன். அவள் என்னையே நோக்கிக் கொண்டிருந்தாள். நெற்றி வியர்வையைப் புடவைத் தலைப்பினுல் ஒற்றி எடுத்தாள், அர்த்தமில்லாத ஒரு புன்னகையை உதிர்த்தவாறு.



■ குடியரசு விழாவில் இந்த விமானங்கள் விலைவாசிகள் இப்படித்தான் உயர்ந்து கொண்டு போகின்றன என உணர்த்துகின்றனவோ! குடியரசு தினத்தை ஒட்டி புதுடில்லியில் நடைபெற்ற விமானப்படை அணிவகுப்பைப் பார்வையிடுபவர்கள் அந்தச் சமயத்தில் எதையாவது சாப்பிட்டுக் கொண்டு இருக்க வேண்டாம் என்று கேட்டுக் கொள்ளப்பட்டார்கள். காரணம் — அதைப் பார்த்து நிறைய பறவைகள் வரும். அவை விமானங்களுக்கு ஆபத்தை விளைவிக்கும்! —இந்துஸ்தான்டைம்ஸ் - பாலி

## பம்பாயில் இசை விழா

■ பம்பாய் கோரேகானிலுள்ள கான கலா வித்யா நிலையம் அதன் சங்கீத, நடன, நாடக விழாவைக் கோலாகலமாகக் கொண்டாடியது. திருவாங்கூர் மகாராஜா பத்மநாப தாஸரின் ஆலோசகர் ஸ்ரீ வைத்தியநாதய்யர் இவ்விழாவைத் தொடங்கி வைத்தார்.








''சாரி.... மிஸ் ஜெஸ்மினா.... நேற்று நான் என் நண்பன் ஒருவனை இடையில் சந்தித்த காரணத்தால், மொபைல் போஸ்ட் ஆபீஸை அடையும் முன்னால் அது புறப்பட்டு விட்டது. இதோ உங்கள் கடிதம்.... 'வெரி சாரி'......''

என் கையில் தயாராயிருந்த உறையை அவளிடம் கொடுத்துவிட்டுத் திரும்பிப் பார்க்காமல் என் இருக்கையில் வந்து அமர்ந்து கொண்டேன். மாலை அலுவலகம் முடியும் நிமிடத்தை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்.

மணி ஐந்து அடித்தது. கிளம்பினேன். வழியில் வரவேற்பு அறையின் நோட்டம்விட்டேன். ஜெஸ்மினா விறுவிறுவென்று என்னை நோக்கி வந்தாள். நான் அவள் என்னை அடையுமுன் வாசற்படிக்கட்டை அடைந்து வீதியில் இறங்கத் தயாரானேன். அதற்குள் அவள் என்னை நெருங்கி விட்டாள்.

'' என்ன அண்ணா... நடை ரொம்ப வேகமாக இருக்கிறது. வீட்டில் என்ன அவசரம்... என் அண்ணி வரட்டும். உங்களைக் கவனித்துக் கொள்கிறேன்.''

கூறியவள் ஜெஸ்மினாதான். என் காதுகளை என்னால் நம்பவே முடியவில்லை.

'' வேலை ஒன்றுமில்லை சிஸ்டர்.... அதனால் தான்......''

அவளை ஆச்சரியத்துடன் நோக்கிவிட்டு நடக்க ஆரம்பித்தேன். ஜெஸ்மினாதான் எவ்வளவு நல்ல பெண். அவள் தன் வாழ்க்கையில் இந்த நிகழ்ச்சியைக் கண்டிப்பாக மறந்து விடுவாள். ஒரு பெண்ணின் வாழ்க்கையில் எனக்கு ஒரு பங்கு — பெருமிதம் தொள்ளச் செய்யும் பகுதி...எனக்கு மிகவும் பெருமை.

அது ஒரு ஞாயிற்றுக்கிழமை.

தேவி தியேட்டரில் வயது வந்தவர்களுக்கென்றே தயாரிக்கப்பட்ட ஒரு திரைப்படம். நாலு சுவர்களுக்கிடையில் நடக்க வேண்டிய செயல்களை ஆயிரம் பேர்கள் மத்தியில் கண்டு களிக்க வந்த எத்தனையோ பேரில் நானும் ஒருவன்தான்.....

விளக்குகள் வீழ்ந்து, திரைச் சீலை விலகியது. படம் திரையில் ஓடத் தொடங்கியதும், ஒரு ஜோடி என் முன்னால் இருந்த இரண்டு சீட்டுகளில் மல்லிகை மணம் பரவ வந்து அமர்ந்தது.

அரை மணி நேரம் ஆயிற்று. படத்தில் என் கவனம் முழுதும் செல்லவில்லை. மொழி புரியாத கோளாறு. அப்பொழுது.....

''போதும் விளையாட்டு.... நீங்கள் ரொம்ப 'நாட்டி' மோகன்.... பின்னால் யாராவது பார்த்துக் கொண்டிருக்கப் போகிறார்கள்.... நேற்று முழுவதும் மகாபலிபுரத்தில் விளையாடியும் ஆசை குறையவில்லை.....''

முன் சீட் நைலக்ஸ் கூறிக் கொண்டிருந்தது.

இந்தக் குரல்.... கீச்சுக் குரலாயிருந்தாலும் கூட எங்கோ நான் கேட்டிருக்கிறேன்.....

'' இப்பொழுதுதான் நீ என் ஜெஸ்மின்.... உண்மையைச் சொல் ஜெஸ்மின். நீ முதலில் காதலித்தது குமாரைத்தானே....?'' அவன் கேட்டான்.

செவிகளையும் விழிகளையும் கூராக்கிப் பார்க்கிறேன்....

ஜெஸ்மினாவும் மோகனும்தான் என் முன்னாலிருந்த சீட்டுகளில் அமர்ந்திருந்த ஜோடி...... மோகனின் கை ஜெஸ்மினாவின் தோளினைச் சுற்றி....

மோகனுக்குப் பதில் கூறினாள் ஜெஸ்மினா. எப்படி ?

''குமாரையா.... நானா...? காதலித்தேனா ? காதல் பண்ணினால் கட்டாயம் கல்யாணம் பண்ணிக்கணும்னு எண்ணும் அப்பாவிக் குமாரை நான் காதலித்தேனா...? அவன் ஒரு பிஸ்கட் பாப்பா.... மோகன், நீங்க வர வர ரொம்ப ஜோக் அடிக்கிறீங்க..''

தன் முன்றானையை அவன் மேல் சரியவிட்டாள் ஜெஸ்மினா.

நான் இடைவேளை வருவதற்கு முன்பே எழுந்து விட்டேன். பஸ் ஸ்டாண்டை நோக்கிச் செல்ல..... ஓர் அப்பாவிக்கு — ஒரு பிஸ்கட் பாப்பாவுக்கு எதற்கு 'அடல்ட்ஸ் ஒன்லி' படம் ?



# சத்திய வெள்ளம்

நா. பார்த்தசாரதி

## முப்பத்திரண்டாவது அத்தியாயம்

அப்போது ஆண்டு கொண்டிருந்த மல்லை இராவணசாமியின் கட்சிக்காரர்கள் தங்களுக்கு வேண்டாதவர்களை ஒடுக்கவும், மிரட்டவுமே போலீஸைப் பயன்படுத்தி வந்தார்கள் என்பது ஊரறிந்த பகிரங்க உண்மையாகியிருந்தது. எஸ்டேட் அதிபரைத் தீவிரவாதிகள் கொலை செய்ததை ஒட்டி மதுரையில் மணவாளனின் வீடு, கண்ணுக்கினியாளின் தந்தை குடியிருந்த சித்திரக்காரத் தெரு வீடு, பாண்டியனின் பாலவநத்தம் கிராமத்து வீடு எல்லாவற்றையுமே சோதனை என்ற பெயரில் போலீஸார் அலைக்கழித்தார்கள். கதிரேசன் முதலிய மாணவர்களுக்கும், அவர்களுடைய தலைவர் பிச்சைமுத்துவுக்கும், இந்த வீடுகளுக்கும் எந்த சம்பந்தமும் இல்லை என்றாலும் ஏதாவது தொல்லை கொடுக்க வேண்டும் என்பதற்காகவே இந்தச் சோதனைகள் நடத்தப்பட்டன. இந்தச் சோதனையினால் ஏற்பட்ட தொல்லைகள் பற்றிப் பாண்டியனின் தந்தையிடமிருந்து அவனுக்கும், கண்ணுக்கினியாளின் தந்தையிடமிருந்து அவளுக்கும், மணவாளனிடமிருந்து அண்ணாச்சிக்கும் கடிதங்கள் வந்திருந்தன. கதிரேசன் முதலிய மாணவர்கள் போலீஸாரிடம் பிடிபட்ட பத்துப் பதினைந்து நாட்களுக்குப் பின் மல்லிகைப் பந்தலுக்கும் நிலக்கோட்டைக்கும் நடுவே உள்ள மலைசார்ந்த காடுகளின் அடர்ந்த பகுதி ஒன்றில் பிச்சைமுத்துவையும் தேடிப் பிடித்துக் கைது செய்து விட்டார்கள். போலீஸார் சோதனையிட்டுக் கைப்பற்றிய பிச்சைமுத்து, கதிரேசன் ஆகியோரின் டைரிகளிலிருந்தும், வேறு இரகசியக் குறிப்புக்களிலிருந்தும் அவர்கள் அந்த எஸ்டேட் அதிபரைக் கொலை செய்வதற்குப் பல நாட்களாகத் திட்டமிட்டிருப்பது தெரிய வந்தது. நல்லவேளையாகக் கதிரேசனும் பிச்சைமுத்துவும் தங்கள் கையெழுத்துக்களாலேயே தத்தம் டைரிகளில் மணவாளன், பாண்டியன் முதலியவர்களைப் பற்றி இந்தக் கொலைக்குத் திட்டமிடுவதற்கு முன்பே 'மனச்சாட்சிக்குத் துரோகம் செய்பவர்கள்' (கான்ஷியன்ஸ் பெட்ரேயர்ஸ்) என்று குறை சொல்லி வருணித்திருந்ததால் இவர்கள் தப்ப முடிந்தது. பாண்டியன் மணவாளன் முதலியவர்களும், கதிரேசன் பிச்சைமுத்து முதலியவர்களும், கருத்து வேறுபட்டவர்கள் என்பதை இந்த டைரிக் குறிப்பு நிரூபித்துவிட்டது. இல்லை என்றால் போலீஸார் மணவாளன், பாண்டியன் முதலியவர்களுக்கு மேலும் தொல்லை கொடுத்திருக்கக்கூடும் என்று தெரிந்தது. பாண்டியன் முதலியவர்கள் தப்பிவிட்டாலும் கதிரேசன், பிச்சைமுத்து ஆகியவர்களோடு நள்ளிரவுக் கூட்டங்களில் கலந்து கொண்ட சில பொறியியல் மாணவர்களையும், சில வேளாண்மைப் பட்டப் பிரிவு மாணவர்களையும் போலீஸார் பிடித்து விட்டனர். வார்டன்கள் விடுதிக் காவலர்கள், டீன்கள் எல்லாருக்கும் மாணவர்களை அதிகமாகக் கண்காணிக்கக் கோரும் இரகசியச் சுற்றறிக்கைகள் துணைவேந்தரால் அனுப்பப்பட்டிருந்தன. மாணவர்களின் விழாக்கள், கூட்டங்கள் யூனியன் நடவடிக்கைகள் எல்லாம் அவை பல்கலைக் கழக எல்லைக்குள் நடந்தாலும், வெளியே நடந்தாலும் அளவுக்கு அதிகமாகக் கண்காணிக்கப்பட்டன. அண்ணாச்சி கடையைக் கண்காணிப்பதற்காக அதற்கு எதிர்ப்புறம் இருந்த மருந்துக் கடை வராந்தாவில் 'மப்டி'யில் ஒரு கான்ஸ்டேபிள் இருக்கத் தொடங்கினார். பல்கலைக் கழகத்துக்குள்ளும், வெளியேயும் மாணவர்கள் சுதந்திரமாக எதையும் செய்ய முடியாத ஒரு சூழ்நிலையைத் துணைவேந்தரும், போலீஸும், ஆர்.டி.ஓ.வும் உருவாக்கியிருந்தார்கள். எங்கும் ஒரு பரபரப்பு இருந்தது.

கதிரேசன் கைது செய்யப்பட்டதற்குப்பின் பல நாட்கள் பாண்டியன் கண்ணுக்கினியாளையும், கண்ணுக்கினியாள் பாண்டியனையும் சந்திக்க முடி



யாமல் போயிற்று. யாழ்ப்பாணத்து மாணவி பாலேஸ்வரியிடம் முறை தவறி நடந்து கொண்ட போலீஸைக் கண்டிக்கச் சென்ற இரசாயனப் பேராசிரியர் ஸ்ரீராமன் தாக்கப்பட்டது சம்பந்தமான நீதி விசாரணை தொடங்கும் தேதி நெருங்கிக் கொண்டிருந்தது. அந்த நீதி விசாரணைக்கான சாட்சிகளை மறுபடியும் சந்தித்து உறுதிப்படுத்துவதற்காக ஒரு நாள் காலையில் பாண்டியன் நண்பர்களோடு விடுதிகளுக்கு எல்லாம் சென்றான். சில சாட்சிகளை மிரட்டியும், குழப்பப்படுத்தியும், ஆளும் கட்சியினரும், துணைவேந்தரும், போலீஸாருமே கலைத்து விட முயன்று கொண்டிருப்பதாகப் பாண்டியனுக்குத் தகவல் எட்டி யிருந்தது. அவன் அப்படிப் புறப்பட்ட தினத்தன்று பல்கலைக் கழகப் பெண்கள் விடுதியை ஒட்டியிருந்த விளையாட்டு மைதானத்தின் 'பாட்மிண்டன் கோர்ட்'டில் கண்ணுக்கினியாளை அபூர்வமாகச் சந்தித்தான். அவளோடும் தோழிகளோடும் விளையாட இருந்த எதிர்த் தரப்புக் குழுவைச் சேர்ந்த பெண்கள் இன்னும் வராததால் உடனடியாக உண்டாகிய உற்சாகத்தை விடாமல் சிறிது நேரம் அவளோடு பூப்பந்து விளையாடினான் அவன். விளையாட்டில் அவள் திறமைதான் வெளிப்பட்டது. அவன் நிறையக் கோட்டை விட்டான். அதற்குள் அவளோடு விளையாட வேண்டிய தோழிகள் வந்து விடவே விளையாட்டை நிறுத்திக் கொண்டு அவளைத் தனியே அழைத்துச் சென்று நீதி விசாரணைச் சாட்சிகள் பற்றி நினைவூட்டினான்

அவன். அந்த விசாரணை தொடர்பாகப் பெண்கள் விடுதியிலிருந்த மூன்று சாட்சிகளும் உறுதியா யிருப்பதாக அவள் தெரிவித்தாள். ''எதற்கும் அவர்களை இன்னொரு முறை பார்த்துப் பேசி வை! கதிரேசன் செய்த காரியத்தால் வந்த பரபரப்பைப் பயன்படுத்தி இங்கே எல்லா மாணவர்களையுமே அரட்டி மிரட்டி ஒடுக்கிக் கொண்டிருக்கிறார்கள்'' என்றான் பாண்டியன்.

''எங்களைப் பொறுத்தவரை அதற்கு அவசியமில்லை! மாணவர்களில் இருக்கும் சாட்சிகள் கைவிட்டாலும் விடலாமே ஒழிய மாணவிகள் நிச்சயமாகக் கைவிட மாட்டார்கள். நான் உங்களிடம் சத்தியம் செய்து கொடுக்கத் தயார்'' என்றாள் அவள். ''கதிரேசனை 'பெயிலில்' வெளியே கொண்டு வர அவன் தந்தை எவ்வளவோ முயன்று பார்த்தும் முடியவில்லையாம். கேள்விப்பட்டேன்.''

''என்ன ஆகுமாம்?''

''செஷன்ஸ் முடிந்த பின்னால்தான் தெரியும்! அநேகமாகப் பிச்சைமுத்துவுக்குத் தூக்குத் தண்டனையும், மாணவர்களாக இருப்பதால் கதிரேசன் முதலிய மற்ற மூவருக்கும் ஆயுள் தண்டனையும் விதிக்கப்படலாம் என்று பேசிக்கொள்கிறார்கள். இதில் அவர்கள் தப்பவே வழியில்லாதபடி மாட்டிக் கொண்டிருக்கிறார்கள்...''

''ரொம்பப் பாவமா யிருக்கிறது...''

''பாவம் ஏது? புண்ணியம் ஏது? நவநீத கவி சொல்லி யிருப்பதுபோல,

'' இருபதாம் நூற்றாண்டின்
பாவ புண்ணியங்களைப்
பெரும்பான்மை சிறுபான்மையால்
மனிதர்களே நிர்ணயிக்கிறார்கள்
குற்றம் நிரூபிக்கப்பட்ட நிரபராதிகள்
விசாரணைக்குப் போகிறார்கள்
நிரூபிக்கப்படாத குற்றவாளிகள்
தொடமுடியாத உயரத்தின்மேல்
பதவிகளிலே இருக்கிறார்கள்
சாட்சியில்லாத உண்மைகளைப்
பொய்களாகச் சித்திரிக்கிறார்கள்
சாட்சியுள்ள பொய்களையே
உண்மைகளாகக் காட்டுகிறார்கள்
ஆம். இருபதாம் நூற்றாண்டின் பாவ
புண்ணியங்களைப்
பெரும்பான்மை சிறுபான்மையால்
மனிதர்களே நிர்ணயித்து
விடுகிறார்கள்!''

என்று ' சொல்லி வேதனைப்பட வேண்டியதுதான். கொலையுண்ட எஸ்டேட் அதிபர் உயிரோடிருந்தபோது தாம் சிக்காதபடி தந்திரமாக எத்தனையோ கொலை, கொள்ளை, கற்பழிப்புக்களைச் செய்திருக்கிறார். ஆனால் அவர் சட்டத்தின் பார்வையில் படவில்லை. இன்று அவரைக் கொன்றிருப்பவர்களோ சட்டத்தின் பார்வையில் வசமாகச் சிக்கிக் கொண்டிருக்கிறார்கள். சட்டம் அவர்களை விடாது.''



''கதிரேசனை நினைத்தால்தான் மனம் வேதனையா யிருக்கிறது.''

''கதிரேசன் மட்டுமில்லை, வடிவேல் மலையாண்டி, பிச்சைமுத்து சார், எல்லோருமே கோபக்காரர்களான நல்லவர்கள்தாம். ஆனால் நல்லவர்களின் ஆத்திரம் கூடச் சட்டத்தால் மன்னிக்கப்படுவதில்லையே? இங்கேதான் இலட்சியத்தை அடையும் மார்க்கத்தைப் பற்றி நாம் கவலைப்பட வேண்டியிருக்கிறது! கதிரேசன் முதலியவர்கள் அதைப் பற்றி நினைக்கவே இல்லை.'' இப்படிச் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்த பின் அவளிடம் விடைபெற்றான் பாண்டியன். மற்ற மாணவர்களும் அவனும் வேறு வேறு விடுதிகளுக்குப் போய் ஏற்கெனவே உறுதி கூறியிருந்த சாட்சிகளைச் சந்தித்துச் சொல்லிவிட்டு வந்தனர். சில சாட்சிகள் தளர்ந்திருப்பது அவர்களுக்கே புரிந்தது. வேறு சில சாட்சிகள் அவர்கள் தேடிப் போன போது கிடைக்கவில்லை. அவர்களைப் பற்றிச் சந்தேகமா யிருந்தது.

போராட்டங்களும், விடுமுறைகளும் அதிகமாகி வேலை நாட்களைக் கணிசமாகக் குறைத்திருந்ததனால் பல்கலைக் கழகத்தின் 'ஸெகண்ட் டேர்மான' இரண்டாவது பகுதி டிசம்பரில் முடிந்து கிறிஸ்துமஸ் பொங்கல் விடுமுறை வந்த போது பத்துப் பன்னிரண்டு நாட்களே பல்கலைக் கழகம் மூடப்பட்டது. அந்த விடுமுறையில்தான் அகில இந்தியப் பல்கலைக் கழகத் தேசிய மாணவர் சம்மேளன மகாநாட்டை மல்லிகைப்பந்தலில் நடத்தத் திட்டமிட்டிருந்தார் மணவாளன். முதலில் பட்டமளிப்பு விழா முடிந்ததும் இந்த மகாநாட்டை நடத்தத் திட்டமிட்டிருந்த அவர் பட்டமளிப்பு விழா இரண்டு மூன்று முறை ஒத்திப் போடப் பட்டதனால் இப்போது மகாநாட்டை முதலில் நடத்திவிட முடிவு செய்து கிறிஸ்துமஸ் விடுமுறைக்கு முன்பாகவே மல்லிகைப் பந்தலில் வந்து தங்கி விட்டார். ஒவ்வோர் ஆண்டும் ஒவ்வொரு ரெஸிடென்ஷியல் பல்கலைக் கழகத்தையொட்டி நடந்த அந்த மகாநாடு முந்திய ஆண்டின் இறுதியில் மணவாளனின் கடைசி வருடப் படிப்பின் போதே, அவர் மல்லிகைப்பந்தலில் நடத்தியிருக்க வேண்டியது. படிப்பின் இறுதி ஆண்டில் ஏற்பாடுகளையும், வசூலையும் கவனிக்க முடியாமல் தட்டிப் போயிருந்ததை இப்போது பாண்டியன் முதலிய மாணவர்களின் துணையோடும் ஒத்துழைப்போடும் சிறப்பாக நடத்திவிட விரும்பினார் மணவாளன். கதிரேசன் முதலியவர்களின் செயலால் தேசிய மாணவர்களின் எதிரிகளும், மல்லை இராவணசாமியின் கட்சிக்காரர்களும் மாணவர்களையும் அவர்கள் இயக்கங்களையும் பற்றிக் 'கொலை வெறி இயக்கம்' என்பது போல் வெளியே பொய்ப் பிரசாரம் செய்யத் தொடங்கியிருந்தார்கள். இந்தப் பொய்ப் பிரசாரத்தை முறியடித்து மீண்டும் மாணவர் இயக்கத்தை உடனே வலுப்படுத்தவும் இப்போது உடனே அந்த மகாநாட்டை அவசரமாக நடத்த நினைத்தார் மணவாளன். பாண்டியன் முதலிய மாணவர்களுக்கும் அவர் நினைப்பது சரி என்றே பட்டது. நாடகப் பட்டப் பிரிவு மாணவ மாணவிகள், நகரத் தியேட்டர் ஒன்றில் நடத்திய இரண்டு நிதி வசூல் நாடகங்களின் மூலம் பதினையாயிரம் ரூபாய் மீந்தது. நன்கொடைகள் மூலமும் தமிழகத்தின் பல பகுதிகளிலிருந்து மாணவர்கள் வசூலித்து அனுப்பிய தொகைகள் மூலமும் இன்னொரு பதினையாயிரம் தேறியது. வேறு நிதி வசூல்களும் நடந்தன.

தமிழகத்திலும் அகில இந்தியாவிலும் இருந்து சுமார் நானூறு சிறப்புப் பிரதிநிதிகளும், இருபத்தையாயிரம் மாணவர்களும் மகாநாட்டுக்கு வருவார்கள் என்று எதிர்பார்த்து ஏற்பாடுகள் நடைபெற்றன. பிரதிநிதிகளாக வரும் நானூறு பேருக்கு மட்டுமாவது தங்க இடம் ஏற்பாடு செய்ய வேண்டுமென்று பல்கலைக் கழக விடுதி அறைகளைப் பயன்படுத்திக் கொள்ள அநுமதி கேட்டுத் துணைவேந்தரைச் சந்திப்பதற்காக மணவாளனும், பாண்டியனும் கண்ணுக்கினியாளும் போயிருந்தார்கள். துணைவேந்தர் அவர்கள் கூறியதை எல்லாம் கேட்ட பின், சிரித்துக் கொண்டே ''அரசியல் மகாநாடுகளுக்குப் பல்கலைக் கழக விடுதிகளைத் தர முடியாது. மன்னியுங்கள்'' என்று மறுத்து விட்டார். அவர் தெரிந்து கொண்டே வேஷம் போடுவதைக் கண்டு மணவாளன் கோபமுற்றார்.

''இது அரசியல் மகாநாடு இல்லை சார்! அகில இந்திய தேசிய மாணவர் சம்மேளன மகாநாடுதான். மாணவர் நலனுக்கான ஆக்கபூர்வமான சிந்தனைகளையே இம்மகாநாடு நோக்கமாகக் கொண்டிருக்கிறது'' என்று மணவாளன் கூறியதை அவர் ஏற்கவில்லை. கண்டிப்பாக மறுத்தார். கடைசியாக மணவாளன் கோபத்தோடு சொல்லிக் காட்டினார்: ''அரசியல் மகாநாடுகளுக்குக்கூட நீங்கள் இந்தப் பல்கலைக் கழக மேஜை நாற்காலிகளையும், ஹாஸ்டல் பாத்திரங்களையுமே முன்வந்து வலுவில் கொடுத்து உதவியிருக்கிறீர்கள், ஸார்!

போன வருடம் இங்கே மே மாத இறுதியில் மல்லை இராவணசாமியின் கட்சி நடத்திய வட்டார மகாநாட்டுக்கு வந்த பிரதிநிதிகள் பல்கலைக் கழக விடுதி அறைகளில் தங்கியதும், பொதுக் குழுக் கூட்டமே செனட் ஹால் பகுதியில் இரகசியமாக நடந்ததும் பொய்யில்லையே?''

''கல்வி அமைச்சரின் சிபாரிசால் அப்போது அப்படிச் செய்ய நேர்ந்தது.''

''ஓகோ! கல்வி அமைச்சரே சிபாரிசு செய்தால்தான் அப்படித் தவறுகளை நீங்கள் செய்வீர்கள் போலிருக்கிறது'' என்று காரசாரமாக எதிர்த்துக் கேட்டு விட்டே வெளியேறினுர் மணவாளன். துணைவேந்தரின் ஆஷாடபூதித்தனம் வெறுப்பூட்டுவதா யிருந்தது.

அதன் பின் நகரத்திலுள்ள ஹோட்டல்களிலும், தேசியத் தொழிலாளர் யூனியன் கட்டிடங்களிலும், மற்ற இடங்களிலுமாகப் பிரதிநிதிகள் தங்க ஏற்பாடு செய்து நகரெல்லையில் ஒரு பெரிய பந்தலில் மகாநாடு நடத்துவதற்குத் திட்டமிட்டுக் காரியங்களைத் தொடங்கினுர் மணவாளன்.

திடீரென்று மகாநாட்டுக்கு முதல் நாள் இரவு முனிசிபல் கமிஷனர் போலீஸாரோடு வந்து, ''இந்த இடத்தில் யார் அனுமதியின் பேரில் பந்தல் போட்டீர்கள்? பந்தலை உடனே பிரித்தாக வேண்டும்'' என்று கூப்பாடு போட்டார்.

''நாங்கள் முறைப்படி பதினைந்து நாட்களுக்கு முன்பே பணம் கட்டி இங்கே பந்தல் போட அனுமதி கேட்டு எழுதியிருக்கிறேம். பணத்துக்கு முனிசிபல் ஆபீசு ரசீது இதோ இருக்கிறது'' என்று ரசீதை எடுத்துக் காட்டினுன் பாண்டியன். அதைக் காண்பித்த பின்னும் நகரசபை அதிகாரி விடவில்லை.

''பணம் கட்டி யிருக்கலாம். ஆனுல் முறைப்படி அனுமதி வழங்கப்படவில்லை.''

''அனுமதி இல்லையானுல் அதையும் உடனே தெரிவித்துப் பணத்தைத் திருப்பி அனுப்பி யிருக்க வேண்டும். பந்தல் போடுகிற வரை விட்டு விட்டுக் கடைசி விநாடியில் இப்படி வம்பு செய்வது நியாயமில்லை.''

அந்த முனிசிபல் கமிஷனர் மல்லை இராவணசாமி சொல்லியபடி போலீசாருடன் வந்து நின்று கத்தியதைக் கேட்டு மாணவர்கள் ஆயிரக் கணக்கில் கூடிவிட்டார்கள். நிலைமை வேறு மாதிரி ஆகி விடும் என்று பயந்த கமிஷனர் அநுமதியை எழுதிக் கொடுத்து விட்டுப் போய்ச் சேர்ந்தார். அந்த முனிசிபல் கமிஷனரின் நிலைமையைப் பார்த்துப் பாண்டியன் பரிதாபம் கொண்டான். அவர் முதலில் விறைப்பாக வந்ததையும், அப்புறம் பெருங் கூட்டமாக மாணவர்கள் கூடியதைக் கண்டு மிரண்டு அநுமதி வழங்கி விட்டுப் போனதையும் கண்டு சிரித்துக் கொண்டே, ''மூன்றுந் தரமான அரசாங்கத்தில் அதிகாரியாக இருப்பதை விட முதல் தரமான அரசாங்கத்தில் சேவகனுக இருப்பது எவ்வளவோ மேல். பாருங்கள்! இந்தக் கமிஷனர் எவ்வளவு தலைக் குனிவோடு திரும்பிப் போக நேரிட்டிருக்கிறது!'' என்றுன் பாண்டியன். மற்ற மாணவர்கள் அதைக் கேட்டுச் சிரித்தார்கள்.

இந்தக் கமிஷனர் நடந்து கொண்டதைப் போலவே மல்லிகைப்பந்தல் ஆர். டி. ஓ.வும் அதற்கு முந்திய தினம் பாண்டியனைக் கூப்பிட்டு அனுப்பி அசடு வழிந்திருந்தார்:

''மிஸ்டர் பாண்டியன்! ஒரு யோசனை. நீங்கள் விரும்பினுல் ஏற்கலாம். இல்லா விட்டால் விட்டுவிடலாம். உங்கள் மகாநாட்டுப் பிரதிநிதிகள் தங்க யூனிவர்ஸிடி ஹாஸ்டல் அறைகள் கிடைக்கவும், மகாநாடு நடைபெற முனிசிபாலிடி ஒத்துழைக்கவும், சுலபமாக ஒரு வழி இருக்கிறது. உங்கள் மகாநாட்டில் அதைத் தொடங்கி வைக்கக் காந்தியப் பெருந்தலைவர் ராமராஜ் அவர்களை நீங்கள் அழைத்திருக்கிறீர்கள். அதற்குப் பதில் நம் கல்வி அமைச்சரையே தொடங்கி வைக்க அழைத்தீர்களானுல் உங்களுக்கு ஓர் இடையூறும் இராது. வேண்டிய உதவிகள் ஜாம் ஜாம் என்று தேடி வரும்.''

''உங்கள் யோசனைக்கு ரொம்ப நன்றி! ஆனுல் அதை நாங்கள் ஏற்பதற்கு இல்லை என்பதை வருத்தத்தோடு அமைச்சருக்குத் தெரிவித்து விடுங்கள்! இடையூறுகளைச் சமாளித்து மகா



**சத்திய வெள்ளம்**

ஒரு மூன்ருந்தரமான அரசாங்கத்தில் பெரிய அதிகாரியாக இருப்பதைவிட ஒரு முதல் தரமான அரசாங்கத்தில் வெறும் சேவகனுக இருப்பது எவ்வளவோ மேலானதாகும்.

■ இலக்கியத்துக்கான நோபல் பரிசு 1925-ம் ஆண்டு 'ஷா'வுக்கு வழங்கப்பட்டது. இப்பரிசு வழங்கப்பட்டதைப் பற்றி ஷா கூறுகையில் ''இந்த வருடம் தான் நான் புத்தகம் எதுவும் எழுதி வெளியிடவில்லை. அதற்கு நன்றியாகத்தான் இந்தப் பரிசை வழங்குகிறார்கள் என்று நினைக்கிறேன்!'' என்றார்.

-எஸ். சீனிவாசன்.

---

நாட்டை எப்படி வெற்றிகரமாக நடத்துவது என்பது எங்களுக்குத் தெரியும் சார்!'' என்று ஆர். டி. ஓ. விடம் முகத்தில் அறைந்தாற் போல் மறுத்து விட்டு வந்தான் பாண்டியன். இதை மணவாளனிடம் போய்ப் பாண்டியன் கூறியபோது, ''ஓகோ! அதிகாரிகள் மந்திரிகளின் இரகசிய ஏஜெண்டுகளாக வேறு செயல் படுகிறார்கள் போலிருக்கிறது'' என்று சொல்லிச் சிரித்தார் அவர். துணைவேந்தரையும் ஆர். டி. ஓ.வையும் தூது விட்டுக் கல்வி மந்திரியே அந்த மகாநாட்டில் தாம் இடம் பெற நைப்பாசைப் படுவது மாணவர்களுக்குத் தெரிவிக்கப்பட்டும் அவர்கள் துணிந்து கல்வி மந்திரியைப் புறக்கணித்தார்கள்.

இரண்டு மூன்று தினங்களுக்கு முன்பிருந்தே மல்லிகைப்பந்தல் நகரம் திருவிழாக் கோலம் பூண்டு விட்டது. வீதிகள் தோரணங்களாலும் வரவேற்பு வாசகங்கள் அடங்கிய வளைவுகளாலும் அலங்கரிக்கப் பட்டன. எதற்கெடுத்தாலும் உடனே போஸ்டர் அச்சிட்டு ஒட்டும் இராவணசாமி கட்சியைச் சேர்ந்தவர்கள், 'மாணவர் என்ற போர்வையில் உயிரைப் பறிக்கும் உலுத்தர் கூட்டத்தின் விழா — பதவி பறிபோன ராமராஜர் தொடங்கி வைக்கிறார். பெருமை பறிபோன பிறரும் கலந்து கொள்கிறார்கள். பாரீர்! பாரீர்!' என்று சுவரொட்டி அச்சிட்டு ஒட்டியிருந்தார்கள். கீழே 'இப்படிக்குத் தமிழின மாணவர் முன்னேற்றக் கழகம்' என்றும் அந்தச் சுவரொட்டியில் அச்சிட்டிருந்தது. இப்படி ஒவ்வொரு செயல் மூலமும் தங்களுடைய கீழ்த்தரமான போக்கை நிரூபித்துக் கொண்டிருந்தார்கள் மல்லை இராவணசாமியின் கட்சி ஆட்கள். 'பாண்டியனோ மற்றவர்களோ அத்தகைய கீழ்த்தரமான எதிர்ப்புக்களை மதித்து அதைப் பெரிதாக்கிப் போரிடாமல் தங்கள் காரியத்தை வெற்றிகரமாக நடத்த வேண்டும்' என்று சொல்லி எச்சரித்திருந்தார் மணவாளன். மாணவர்கள் அந்த அறிவுரைக்குக் கட்டுப்பட்டுப் பணியாற்றினார்கள். மகாநாடு மிகச் சிறப்பாக நடந்தது. கடல்போல் மாணவர் பரந்த கூட்டத்தில் மணவாளன் வரவேற்புரை கூறியதைத் தொடர்ந்து காந்தியப் பெருந்தலைவர் ராமராஜ், ''நமது பல்கலைக் கழகக் கல்வியில் இன்னும் இந்திய தேசியத் தன்மையின் சாயல்கள் கூட விழவில்லை. நமது பல்கலைக் கழகங்கள் விஞ்ஞானிகளை விட அதிகமான குமாஸ்தாக்களையும், நிபுணர்களை விட அதிகமான உத்தியோகஸ்தர்களையுமே தயாரித்து அனுப்புகின்றன. இந்த நிலைமை மாற வேண்டும். பல்கலைக் கழகங்களில் சுதந்திரமாகச் செயலாற்றும் துணைவேந்தர்கள், பேராசிரியர்கள் பணிபுரிய வேண்டும். அரசாங்கத்துக்குத் தலையாட்டுகிற அறிவாளிகளால் பல்கலைக் கழகத்தின் தனித்தன்மை கெட்டுவிடும். மாணவர்களை அரவணைத்துக் கொண்டு வளர்க்கும் அன்பு மயமான நிர்வாகம்தான் ஒரு பல்கலைக் கழகக் கல்விக்குத் தேவை. வேலையை அடிப்படையாகக் கொண்ட கல்வி அவரவர் விருப்பத்துக்கேற்ப அமைய வேண்டும்'' என்பது போலப் பல சீரிய கருத்துக்களை உருக்கமாகத் தம் பேருரையில் கூறினார்.

அழைப்பிதழ் கொடுத்திருந்தும், மல்லிகைப்பந்தல் துணைவேந்தர் அரசாங்கத்துக்குப் பயந்து அந்த மகாநாட்டுப் பக்கம் எட்டிப் பார்க்கவே இல்லை. ''வேர் இஸ் யுவர் வொண்டர்ஃபுல் வி.ஸி.?'' என்று அந்த மாநாட்டுக்கு வந்திருந்த ஒரு வட இந்தியப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் பொறுமை இழந்து மணவாளனிடம் கேட்டார். மணவாளன் சிரித்துக் கொண்டே தாயுமானவனாரைப் பற்றி அவருக்கு விளக்கினார். பிற்பகல் மகா நாட்டில் மாணவர் பிரதிநிதிகள் பேசினார்கள். பல்கலைக் கழக மாணவர் நலன்களை அடிப்படையாகக் கொண்ட பல தீர்மானங்கள் முன்மொழியப்பட்டு வழிமொழிதலுடன் கரவொலியால் நிறைவேற்றப்பட்டன.

இரவு ஒன்பது மணிக்குக் கண்ணுக்கினியாளும், மல்லிகைப்பந்தல் பல்கலைக் கழக நாடகப் பிரிவு மாணவர்களும் நடிக்கும் ஒரு நாடகம் நடக்க இருந்தது. மணவாளனும், பாண்டியனும் மற்றும் சில முக்கியமானவர்களும் ஊர் திரும்ப இருந்த தலைவர் ராமராஜ் அவர்களை வழியனுப்பப் போயிருந்தனர். 'கிரீன் ரூம்' என்ற தட்டி மறைப்பில் கண்ணுக்கினியாளும் மற்ற நடிகர்களும் நாடகத்துக்குத் தயாராகிக் கொண்டிருந்தார்கள். வெளியே குளிர் நடுக்கிக் கொண்டிருந்தது. அப்போது யாரும் எதிர்பாராத விதமாக மகாநாட்டுக்கே திருஷ்டி கழித்தது போல ஓர் அசம்பாவிதம் நடந்தது. (தொடரும்)




மீ. ப. சோமு

## 13. இசைக்கு ஆடும் பெருமான்

திருநெல்வேலி மாவட்டத்தில் ''இசக்காடும் பெருமா பிள்ளை'', ''இசக்கையாப் பிள்ளை'', ''இசக்கம்மை'' முதலிய பெயர்களைப் பல ஊர்களிலே பார்க்கலாம். இசைக்கு ஆடும் பெருமான், இசைக்கு அப்பன், இசைக்கு ஐயன், இசைக்கு அம்மை என்ற பெயர்களே கொச்சையாக இவ்வாறு மருவி வழங்குகின்றன.

இசைக்கு ஐயன், இசைக்கு அப்பன், இசைக்கு அம்மை, இசைக்கு ஆடும் பெருமான் என்னும் பெயர்கள் எத்தனை இசைப் பண்போடு ஒலிக்கின்றன பாருங்கள்! நடராஜ சுந்தரனுக்கும், சிவகாமசுந்தரிக்கும் இப்படி அழகான பெயர்கள் பழைமையான நாளிலிருந்து வழங்கி வந்துள்ளன!

இசைக்கு அப்பனையும், இசைக்கு அம்மையையும் பற்றிய மிக மிகப் பழைய பாடல் ஒன்று இசைப் பண்போடு பாடிக் குதித்துக் கொண்டு வருகிறது. பார்க்கலாம்.

**பூண்ட பறை அறையப்**
**பூதம் மருள**

[பூண்ட — வாரினால் இறுக்கிக் கட்டிச் சுருதி சேர்க்கப்பட்ட. பறை — தாள வாத்தியம். பூதம் — பூதகணங்கள். மருள — மயங்கும்படியாக. பயபக்தியோடு இசையிலே இறங்கும் படியாக.]

சுடலையிலே ஆடுகிறான் சுடலை முத்துவாகிய சிவபெருமான். அவனுடைய அரங்கம் சுடலையாகிய ருத்ரபூமி — மயானம்! அங்கே வாரினால் இறுக்கிக் கட்டிய பறையாகிய முரசம் கொட்டுகிறது. எப்படிக் கொட்டுகிறது? பூதங்கள் மருளும்படியாகக் கொட்டுகிறது!

**பூண்ட பறைமறையப்**
**பூதம் மருள**
**நீண்ட சடையான்**
**ஆடுமே!**

நீளமான சடை! அது தொங்கி விரிந்து ஆடுகிறது.

**நீண்ட சடையான்**
**ஆடும் என்ப**
**மாண்ட சாயல்**
**மலைமகள் காணவே! காணவே!**

[மாண்ட — மாண்பு பொருந்திய. பழைய தமிழ்ச் சொல்லின் பழைய ஆட்சி.]

மாட்சிமை பொருந்திய சாயலோடு கூடிய எம் அரசியான மலைமகள் பார்வதி, இந்த நடனத்தைக் கண்டு சொக்குகிறாள்! காணவே, காணவே என்று இரண்டு முறை திரும்பத்



திரும்பச் சொல்வதன் பொருள், அவள் அப்படியே அந்த நடனத்தில் சொக்கிப் போய்ப் பார்த்துக் கொண்டே நிற்கிறாள்! இமை கொட்டாமல் பார்க்கிற அந்தத் தெய்வதக் கண்கள், அந்த நடனத்தின் சுழற்சியை அங்கங்கே அப்படி அப்படியே துவண்டு துவண்டு பின்தொடர்ந்து சென்று பார்க்கின்றனவாம்! ''காணவே, காணவே'' என்றால் அத்தனை பொருள்!

மீன் போன்ற கண் என்று சொன்னால் என்ன கருத்து? மீனைப்போல் இமை கொட்டாமல் பார்க்கிற கண் என்றும், மீனின் வடிவத்தில் அமைந்த கண் என்றும், மீனைப் போன்று நீர்ப்பரப்பை ஊடுருவி மின்னுகிற கண் என்றும், மீனைப் போலத் துள்ளுகிற துவளுகிற, கண் என்றும் பொருள்! மீனாக்ஷி—அங்கயற்கண்ணி. அம்—அழகிய. கயல்—மீன். கண்ணி — கண்ணை உடையவள்.

''மாண்ட'' என்ற சொல்லுக்கு மாண்பு பொருந்திய, அதாவது பெருமை பொருந்திய அழகிய, என்பது பழங்காலத்துப் பொருள். பாடல் மிகவும் பழமையானது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கும் முந்தியது என்பதற்கு இந்தச் சொல் ஓர் உட்சான்று. இந்த ஒரு சொல்லைத் தவிர மற்றப்படி பல நூறு ஆண்டுகளுக்கு முந்திய பாடலில் வேறு எந்தச் சொல்லும் கடினமான சொல்லாக இல்லை, பாருங்கள்!

தொல்காப்பிய உரையில் மேற்கோளாக வருகிற ஒரு பாட்டு இது! பழைய பாட்டு என்றால் பல்லை உடைக்கும் என்று எண்ணுவது எவ்வளவு தவறு! எளிமையிலும், எளிமை, இனிமையிலும் இனிமை! இசைப் பண்போ பாடிப் பார்த்தால் தெரியும், அதன் சுகம்! ''காணவே காணவே'' என்பதில் அந்தக் கண்கள் வந்து நம் கண் முன்னே நிற்கின்றன!

மாண்பு பொருந்திய நடனம்! மாண்பு பொருந்திய பாடல்!

**பூண்ட பறையறையப்**
**பூதம் மருள**
**நீண்ட சடையான்**
**ஆடுமே!**
**நீண்ட சடையான்**
**ஆடும் என்ப**
**மாண்ட சாயல்**
**மலைமகள் காணவே! காணவே!**

## குமாரி மல்லிகா



அண்மையில் மயிலை ஃபைன் ஆர்ட்ஸ் ஆதரவில் நடைபெற்ற குமாரி மல்லிகாவின் பரதநாட்டிய அரங்கேற்றம் இரண்டு வகைகளில் மற்ற அரங்கேற்றங்களிலிருந்து மாறுபட்டிருந்தது. பரதக் கலையில் முழுத் தேர்ச்சி அடைந்த பின்னரே அரங்கேற்றம் நடைபெற வேண்டும் என்று கலையை அபிவிருத்தி செய்து கொண்டு மேடைக்கு வந்துள்ளார் குமாரி மல்லிகா என்பதைப் பெருமையுடன் சொல்ல வேண்டும். அவசரப்படாமல் காத்திருந்து அரங்கேற்றம் நடைபெறுவதில் நன்மை இருக்கவே செய்கிறது என்பதைக் குமாரி மல்லிகாவின் ஆடல்கள் எடுத்துக் காட்டின. மேடையில் தோன்றிய உடனே ரசிகர்களைக் கவரக்கூடிய தோற்றம். தன்னம்பிக்கையுடன் நிருத்திய, அபிநய பாவங்களையும் அடவுக் கோவைகளையும், காலப் பிரமாணம் தவறாமல் ஆடினார். எந்த அம்சத்தையும் மிகைப்படுத்துவதோ குறைப்பதுவோ இல்லாமல் எந்த அளவுக்கு எந்த வேகத்தில் ஆடிக் காட்டினால் கலை அழகு வெளிப்படுமோ, அந்த அளவுக்கு ஆடினார். குறிப்பாக ஜதிஸ்வரமும், உசேனி வர்ணமும் பாராட்டும் விதத்தில் ஆடப்பட்டன. குறிப்பிட வேண்டிய இரண்டாவது அம்சம் நிகழ்ச்சி நிரலில் கச்சிதமாகச் சில உருப்படிகளே இடம் பெற்றிருந்தன. எந்த அளவுக்கு எந்தெந்த 'அயிட்டங்'களைச் சேர்த்தால் ரசிக்குமோ அந்த அளவுக்கு மட்டுமே நிகழ்ச்சியில் சேர்க்கப்பட்டிருந்தது. பூரண சந்திரிகாவில் தில்லானா அமைந்திருந்தது. ரங்கபுர விஹாரா என்பதைப் பதத்துக்குப் பதிலாக நிகழ்ச்சியில் சேர்த்துக் கொண்டிருந்தார். இவ்விரண்டையும் முழுமையாக ஆடி அபிநயித்தபோது குமாரி மல்லிகாவுக்கு ஏற்பட்ட திருப்தியைப் போலவே ரசிகர்களுக்கும் நிறைவு ஏற்பட்டது. சீதா சுப்ரமணியத்தின் பாட்டு முதல் தரம்.

குமாரி மல்லிகா மத்திய அரசு செய்தித் துறையைச் சேர்ந்த செய்தி உதவி அதிகாரி திரு எம். ராமநாதனின் புதல்வி. ஸ்ரீமதி கே. ஜே. ஸரஸாவின் நட்டுவாங்கம் அரங்கேற்றத்தைச் சோபிக்கச் செய்தது.

மலர்ந்துள்ள மல்லிகாவின் கலைத் திறன் மேன் மேலும் மணம் பரப்பட்டும்! — சிவஸ்வாமி

"**எ**ன்னடா பையா! லீவு நாளிலும் வீட்டில் தங்காமல், ஓயாமல் அலையறியே! உடம்பு என்னத்துக்கு ஆகும்? எண்ணெய் தேய்ச்சுக் கிட்டுக் குளி.... தூங்கு'' என்று விசாலம் மாதவனிடம் வேண்டினாள்.

''நிறைய வேலை இருக்கும்மா! ஓய்வு ஒழிச்சல் இல்லாமல் வேலை செய்து நல்ல பெயர் வாங்கினால்தானே முன்னேற முடியும்? அம்மா! என் உடம்பைப் பற்றி நீ கவலைப் படாதே!'' என்ற மாதவன் வெளியே புறப்பட்டான்.

ஆம்! மாதவனுக்கு வேலை தலைக்கு மேலே. அவனுக்கு மட்டுமல்ல. கோவிந்தன், தேவராசன், மோகன்– இவர்களுக்கும்கூடத்தான்!

அயனாவரத்திலிருந்து மாம்பலத்துக்கு வீடு மாறுகிறான் அம்சா. அயனாவரம் வீட்டிலிருந்த எல்லாச் சாமான்களையும் வாடகை வண்டியில் ஏற்றி மாம்பலத்தில் புது வீட்டில் இறக்கி வைக்க வேண்டும். வேண்டிய எல்லா உதவிகளையும் செய்யத்தான், மாதவன் பரபரப்புடன் விரைந்தான். மற்ற மூவரும் அவனுக்காகக் கிள்ளி முனையில் காத்திருப்பார்கள். நேரமானால் அவர்கள் அயனாவரம் போய்விடுவார்கள். அம்சாவிடம் ஏற்கனவே வாங்கியுள்ள நல்ல பெயருக்கு மாசு ஏற்படும். மீனாவும் மைதிலியும்கூட அவனைப் பற்றித் தவறாக எண்ண ஆரம்பிப்பார்கள். அப்புறம் காதலாவது கத்தரிக்காயாவது! இப்போதே பிரச்னை. அவர்கள் மூவர். மாதவன் உட்பட ஆடவர் நால்வர். அந்நால்வருள் ஒருவனுக்கு



வாய்ப்பில்லை. வாய்ப்பு இழப்பவனாகத் தான் இருக்கலாகாது என்ற எண்ணம் மாதவனைத் துரவி எடுத்தது. போனால் போகட்டும் என்றுகாக மிருதியாகச் செலவழித்து வாடகைக் காரைப் பிடித்துக் கிள்ளி முனைக்கு வேகமாக விரைந்தான்.

அம்சாவும், மைதிலியும், மீனாவும் ஒரே நாளில் ஒரே அலுவலகத்தில் வேலையில் அமர்ந்தவர்கள். இளஞ் சிட்டுக்கள். கனவுகளைப் படைக்கும் மங்கைப் பருவத்து நங்கையர். அவர்களுக்கு முன்பு பெண்டிர் அந்த அலுவலகத்தில் வேலைக்கு அமர்ந்ததில்லை. ஆடவர் மட்டுமே பணி புரிந்து வந்த அந்த அலுவலகத்தில் பெண்களுக்கும் வேலை தர வேண்டும் என மேலிடத்து உத்தரவு வந்தது.

பெண்டிர் மூவரும் வேலையில் சேரு முன்பு அலுவல் கவனமே மாதவன் குழுவினருக்கு. கவனச் சிதைவு ஏதும் இல்லாமல், தரப்பட்ட பணியை முடித்து வந்தனர். இப்பொழுதோ மகளிர் மூவருக்கும் பணிவிடைகள் பல செய்யும் தொண்டுக்கே நேரம் போதவில்லை. பெண்களின் கடைக்கண் அசைவில், எந்தப் பணியாக இருப்பினும் செய்து முடிக்கத் துடித்தனர். செய்து முடித்தால் அன்றி நிம்மதி மாதவன் குழுவினருக்கு ஏற்படுவதில்லை.

மறு வாரம். மோகனும் கோவிந்தனும் தேவராசனும் மாதவன் வீட்டுக்கு வந்தனர். மீனா செய்து முடித்திருக்க வேண்டிய வேலைகளை அவள் சரிவரச் செய்யாமல் வேலை தேங்கிவிட்டதால் அவளைக் கண்டித்திருந்தார் அலுவலக மேலாளர். செய்தியறிந்து நண்பர்கள் நால்வரும் கண்ணீர் விட்டனர். மீனாவின் இடர்ப்பாட்டை அறிந்து, தாங்களே அவளுடைய பாக்கி வேலைகளை முடித்துத் தருவதாக முடிவு செய்துகொண்டு பைல்களை மாதவன் வீட்டுக்குக் கொணர்ந்து ஞாயிறு முழுதும் செலவழித்து மீனாவுக்கு உதவ முன்வந்தனர் நண்பர்கள் நால்வரும். மீனாவுக்கு அவசரமான எங்கேஜ்மெண்ட். காலைக் காட்சி ஒன்றுக்கு அவள் முன்பே ரிசர்வ் செய்திருந்தாள். எனவே அவள் வராததைப் பற்றிக் கவலைப்படாமல், கண்ணும் கருத்துமாய் பைல்களைப் புரட்டினர். சிக்கல்கள் பல. எளிதில் அவை முடிவதாக இல்லை.

''டேய் கோவிந்தா! நந்தகோபால் பயல் மட்டும் கொஞ்சம் உதவினால் வேலை முடியும்டா. மீனாவுக்கு முன்னே அவன்தானே இந்த வேலையைப் பார்த்தவன்? நீ போய் அவனை அழைச்சுக்கிட்டு வாடா...'' என்றான் மாதவன்.

''அவனா! பெரிய கொம்பேறி மூக்கனாச்சே! நான் நேத்தே கேட்டுட்டேன். முடியாதுன்னு மறுத்து விட்டான். 'மார்னிங் ஷோ போறதுக்கு நேரமுள்ளவள், தானாக இந்த வேலையைச் செய்து முடிக்க முடியாதாமா? வேலையத்த பசங்க நீங்களே செய்யுங்க' என்று மீனாவின் காது படவே அவன் சொல்லி விட்டாண்டா'' என்றான் தேவு.



''லேடீஸ் நம்ம ஆபீசில் வராத முன்னே நம்ம கூடவே சுத்திக்கிட்டிருந்த பயல், இன்னிக்கு நம்மோடு சேருவதில்லை. பொறாமைடா... பொறாமை. லேடீஸ் நம்மகூடப் பழகுறாங்க. இவனை யாரும் சட்டை செய்யறதில்லை. அது தான் கோபம் வருது அவனுக்கு'' என்றான் கோவிந்தன்.

''அதுக்கு என்ன செய்யறது? இத்தனைக்கும் அவனுக்குக் கல்யாணம் ஆகலே. அவங்க கிட்டே 'உர்' என்றிருக்கிறான்.

# அல்லி ராணிகள்

தேவேந்திரி




நம்ம மாதிரி உதவி செய்யற பரந்த மனம் இல்லே'' என்றான் மோகன்.

''சரிடா, வேலையைப் பாருங்க'' என்று பேச்சைத் திருப்பினான் மாதவன்.

வேலை ஒரு வழியாக முடிந்தபோது மாலை மணி ஆறு ஆகி விட்டது.

''தேவு! மைதிலி எம்ப்ராய்டரி நூல் கேட்டிருந்தாளே! வாங்கிக் கொடுத்தியா? இல்லே

நானே போய் வாங்கித் தரட்டுமா?'' என்றான் மோகன்.

''நேற்றே முடிச்சுட்டேன். அம்சாவின் வீட்டில் குழாய் ரிப்பேராம். ஆளை அழைச்சுண்டு போய் ரிப்பேர் பார்க்கணும்!'' என்ற படி தேவு விடைபெற்றான். மீனுவிடம் பைல்களைச் சேர்க்க மற்ற மூவரும் ஒன்றாகவே புறப்பட்டனர்.

அலுவலக இடைவேளை நேரம்.

பெண்களுக்கென ஒதுக்கப்பட்ட சிறு உணவறையில் பெண்கள் மூவரும், தாம் கொணர்ந்த சிற்றுண்டிகளைப் பகிர்ந்துகொண்டிருந்தனர்.

''மைதிலி! சூடாகப் போண்டா கான்டீனில் போடறான். வேணுமா?'' என்று மோகன் மிகவும் அக்கறையுடன் கேட்டான்.

''தாங்க்யூ மோகன். தேவு இட்டே முன்னமே சொன்னோம். இன்னும் அவன் வரல்லியே!'' என்றாள் மைதிலி.

''மோகன், நீயே பார்த்துட்டு வாயேன்'' என அம்சா சொன்னதும், மோகன் கான்டீனை நோக்கி ஓட்டம் பிடித்தான். இன்னும் அவன் சாப்பிடவில்லை. லேடீஸ் முதல்! அவர்களுடைய சாப்பாட்டு வேலையே முடியாதபோது அவனுக்கும் நண்பர்களுக்கும் பசி உணர்வே வராதே!''

''நந்தகோபால் கடுவன் பூனையோ? வேலையில் மிகவும் கண்டிப்பாக இருக்கிறாரே!'' என்றாள் மீனு அம்சாவிடம்.

''பெண்கள் என்றால் வினியன்ஸியே கிடையாதே!'' என்றாள் மைதிலி.

''அரட்டையடிப்பது பிடிக்காதாம். வேலை மேல் கண்ணாக இருக்கணுமாம். ஒரு முறைக்கு இரு முறை சொன்னால் 'கப்'பென்று பிடித்துக்கொள்ள வேணுமாம். அவர் கோள் மூட்டித்தான் மானேஜர் உன்னைக் கண்டித்தாராம், மீனு!'' என்றாள் அம்சா.

''அப்படியா?'' — மீனு.

''சூடான போண்டா, வடையும் கூட'' என்றபடி தேவு உள்ளே நுழைந்தான். மற்ற மூவரும் பின்தொடர்ந்தனர்.

''சாப்பிடுங்கோ... உங்களுக்கு வடையும் பிடிக்கும்னு நான்தான் யோசனை கூறினேன்'' என்றான் மாதவன். அவனை முறைத்தான் கோவிந்தன்.

''தேங்க்யூ!'' என்ற அம்சா அவனுக்கு வழங்கிய புன்னகைப் பரிசு அவனுடைய இதயத்தைக் குளிர்வித்தது.

''வெளியே ஊம்பியாச்சு. நல்லது. பதில் சொல்லிவிட்டுப் போயேன். யார் வேணுங்கிறாங்க...'' என்று விசாலம் முணுமுணுத்தாள்.

''என்னம்மா நீ! பதிலுக்கு என்ன அவசரம்? கிடைத்திருக்கிற ஜாதகம் எதுவும் எனக்குப் பிடிக்கலே. நானே தக்க இடத்தில் சொல்லி, ஒன்றென்ன, மூன்று வாங்கி வரேன்'' என்றான் மாதவன்.

''மூன்று ஜாதகங்களா? யார் அவங்க? உன் கூட வேலை செய்யற மூன்று பெண்களா?''

''கரெக்ட்.''

''நல்லா இருக்குடா! வந்தாலும் வந்தாளுங்க, அல்லி ராணிங்க. உங்க நான்கு பேரையும் ஆட்டிப் படைக்கிறாளுங்களே! நீங்க நாலு பேர். அவளுங்க மூன்று பேர். யாருக்கு யார்? உங்களுக்குள் சண்டை வந்து சுந்தோப சுந்தன் கதைதான் நடக்கப் போகுது'' என்றாள் விசாலம்.

''அம்மா! நீ கவலைப்பட ஒன்றுமில்லே. அவங்க மூன்று பேர்தான். நாங்க நாலு பேர். ஒருத்தருக்கு சான்ஸ் இல்லே. உண்மை. எங்களுக்கு யாருக்கு சான்ஸ் இல்லா விட்டாலும் வருத்தமில்லே. சண்டையே வராது'' என்று மாதவன் தன் தாய்க்குச் சமாதானம் சொன்னாலும் அவனுக்கே உள்ளூறப் பயம்தான். அம்சா, மைதிலி, மீனு — இம்மூவரில் அவன் இதயத்தைக் கவர்ந்தவர்கள் மூவருமே. ஒருவருக்கொருவர் சளைத்தவர்கள் இல்லை. சிலபோது நெருங்குகிறார்கள் அப்பெண்கள். சிலபோது விலகி விருப்பது போல் தோன்றுகிறது. நால்வரில் வாய்ப்புத் தனக்கு இல்லாமல் தோற்றுவிடுவோமோ என அவன் கலங்கினான். எப்படியாவது முயன்று தான் வெற்றியடைய அயராது உழைக்க வேண்டும் என அவன் உறுதி பூண்டான்.

மாலை ஏழு மணி. அலுவலகத்தில் இன்ஸ்பெக்ஷன் வேலை நடந்து கொண்டிருந்தது. தொடர்ந்து சில நாட்கள் அவ்வேலை நடக்கும். இருட்டுவதற்கு முன்பாகவே அம்சாவும் தோழிகளும் மேலாளரின் அனுமதி பெற்றுக் கிளம்பி விட்டனர்.

அவர்களுடன் சென்று அவரவர் செல்ல வேண்டிய பஸ்ஸில் அவரவர்களை ஏற்றி விட்டுப் பின்னர் அலுவலக வேலையைத் தொடர்ந்து செய்ய, மாதவனுக்கும் நண்பர்களுக்கும் ஆசை. ஆனால் அப்பால் இப்பால் நகர முடியாத அளவு வேலை குவிந்திருந்தது. மறுநாள், மறு வாரம், மறு மாதம் வரை இந்த இன்ஸ்பெக்ஷன் வேலை நீடித்தால்? நினைக்கவே சங்கடமாக இருந்தது.

'பாவம்! பஸ்ஸில் அவர்களுக்கு இடம் கிடைக்கிறதோ இல்லையோ? பஸ்ஸில் அவர்கள் ஏறும் முன்பு சில்லறை இல்லை என்றால் உதவ யார் இருக்கிறார்கள்? 'பஸ் கிடைக்கா விட்டால் டாக்சி அமர்த்த யார் இருக்கிறார்கள்?' என மாதவனும் தோழர்களும் தவியாய்த் தவித்துக் கொண்டிருந்தார்கள். வேலையிலும் கவனம் செலுத்த முடியவில்லை. வெளியிலும் போக முடியாது. 'ஓ' என்று மார்பில் அடித்துக் கொண்டு ஒரு ரவுண்டு அழலாம் போல் அவர்களுக்குத் தோன்றியது.

''என்ன சார்! ஒரு மாதிரியாகிறீங்க!... காப்பி சாப்பிடுங்களேன்!'' என்று உபசாரம் புரிந்தான் அலுவலக ஏவலன் முனுசாமி.

''வாங்கி வாயேன்...அப்படியே பஸ் ஸ்டாண்டு வரையில் போய் அவங்க போயிட்டாங்களா இல்லையான்னு பார்த்துட்டு, வர வழியில் டிபன் சாப்பிட்டுட்டு வா'' என்றான் தேவு. முனுசாமி, மோகன் நீட்டிய ஐந்து ரூபாயைப் பெற்றுக் கொண்டான்.

''நல்ல ஐடியா'' — மாதவன்.

''சார்! காப்பி வாங்கியாறேன். போனுப் போவுதுன்னு உங்களுக்காக நான் டிபன் சாப்பிட்டு விட்டு வாரேன். ஆனா இன்னொண்ணு மட்டும் நம்மால் முடியா

துங்க... தெரியாமத்தான் கேக்கறேன் அவங்க மூணு பேரும் வீட்டுக்கு எப்போ, எப்படிப் போனு உங்களுக்கு என்ன? வியந்து வியந்து உபசாரம் பண்ணறீங்க. அவங்க என்ன டான்னு உதவி மட்டும் வாங்கிக்கிறு, உங்களே மதிக்காமப் பேசிக்கிறுங்க.''

''என்ன ! என்ன !'' — நால்வரும்.

''இந்தப் பொண்ணுங்க இருக்காங்களே, பலே கில்லாடிங்க சார்!''

''அதென்ன கில்லாடி? அப்படிச் சொல்லாதே முனுசாமி!''

''நீ ஒண்ணு சார்! கில்லாடின்னு தப்பா நெனேச்சுக்கிட்டியா சார்! பிழைக்கத் தெரிஞ்சவங்கன்னு அர்த்தம் சார்.''

''அதென்ன?''

''நந்தகோபால் சார், அவங்ககிட்டே பழகாம ஒதுங்கி ஒதுங்கிப் போருரா, இவளுங்க பாத்தாளுங்க... ஒருத்திக்குத் தெரியாம ஒருத்தியாகத் தன்னேட ஜாதகத்தை அவங்க அவங்க அப்பாவிடம் சொல்லி நந்தகோபால் சார் அப்பா கிட்ட அனுப்பியிருக்காங்க. நந்தகோபால் சார் ஜாதகத்துக்கு எது பொருத்தம்னு அவரோட அப்பா இப்போ பார்த்துக்கினுக்கிருரு. சோசியர் எங்க பக்கத்து வீட்டுக்காரர்தான். எப்படிக் கீது கதை?''

'' என்ன முனுசாமி ! -அளக்கறியே !'' என்ருன் மாதவன்.

'' சேச்சே ! முரட்டுப் பய நந்தகோபாலே மனிதனுகவே மதிக்க முடியாது !'' என்ருன் மோகன்.

'' நீங்க ஒண்ணு சார் ! வெவரம் தெரியாமப் பேசறீங்க. அவர் ஒதுங்க ஒதுங்க அட்ராக்ஷன் அதிகமாவுது. 'சம்பளம் வாங்கறீங்க. அவங்க அவங்க வேலேயை அவங்க அவங்க சரியான டைம்லே செய்யுங்க' என்கிருர் அவர். கல்யாணம் ஆகாத பொண்ணுங்ககிட்டே எவ்வளவு தூரத்திலே இருக்கணுமோ அவ்வளவு தூரத்திலே இருக்கார். அவர் கூடப் பேச இவங்களுக்கு ஆசை அதிகமாகுது. அவரோ, அநாவசியமாகப் பேசுவாரா! ஊஹுூம். நிழலேத் தொரத்திக்கிட்டு நாம ஓடினு, என்னிக்கும் பிடிக்க முடியாது சார். நிழல் நம்மைத் துரத்தணும்.... நாம ஓடணும். நந்தகோபால் சார் பின்னுலே ஒண்ணு இல்லே, மூணு நிழல் ஓடுது. எது அவரைக் கப்புன்னு பிடிச்சிக்குமோ!'' என்று முனுசாமி கூறவும், அவன் முன், நண்பர் நால்வரும் மயங்கி விழும் நிலேயில் இருந்தனர்.

'' ஓடு ஓடு... காப்பி வாங்கி வா !'' என்ருன் மாதவன்.

''எனக்கும்.'' — மோகன். ''சீக்கிரம்.'' — கோவிந்தன். ''ஹர்ரி அப்.'' — தேவு.

முனுசாமி பிளாஸ்க் எடுத்துக் கொண்டு ஓடிஞன். ஓடிக் கொண்டே கேட்டான்: '' பஸ் ஸ்டாண்டுக்கும் போய் வரட்டுமா ?''

''யார்ரா இவன் ஒரு மடப் பையன்.... நேரே இங்கே வா..... எவ, வீட்டுக்கு எப்போ போனு நமக்கு என்னடா...?'' என்ருன் மாதவன் — இது வரையில் நிழலேத் துரத்தியவன், இனி நிழல் தன்னேத் துரத்துமாறு ஓடப் போவதற்கு அறிகுறியாக.

## ★★★★★★★★★ லட்சம் பெற்ற சதம் ★★★★★★★★★

### கிரிக்கெட்டில் கொலே!

■ மிகவும் அமைதியான ஆட்டம், கௌரவமான ஆட்டம், பெருந்தன்மையானவர்களால் ஆடப்பெறுகின்ற ஆட்டம் என்று வருணிக்கப்படும் ஆட்டம் ஒரு சமயம் வன்முறையைக்கூடச் சந்தித்திருக்கிறது. 1776ம் ஆண்டு நில்பரி என்னும் இடத்தில் கெண்ட் மாகாணத்துக்கும் எசக்ஸ் மாகாணத்துக்கும் நடந்த கிரிக்கெட் ஆட்டத்தில் தோன்றிய கருத்து வேற்றுமையின் காரணமாக மூன்று பேர் கொல்லப்பட்டனர்.

1750ம் ஆண்டு கிரிக்கெட் விளேயாட்டில் ஆர்வமுள்ள வேல்ஸ் இளவரசர் மார்பிலே பந்து பட்டதன் காரணமாகவே உயிர் துறந்து விட்டார்.

### சமரசத்துக்கும் கிரிக்கெட்

■ கிரிக்கெட் தோன்றிய காலத்தின் ஆரம்ப நாட்களில் பிஜித் தீவில் இரண்டு கிராமங்களுக்கிடையே எழுந்த சச்சரவைத் தீர்க்க, சமரசத் திட்டமாக, கிரிக்கெட் ஆடி முடிவெடுப்பது என்று தீர்மானித்தனர்.

குழுவுக்கு ஐம்பது பேர் என்று முடிவு செய்து, அகப்பட்ட ஆட்களேயும் சிறுவர்களேயும் சேர்த்து ஆடத் தொடங்கினர்.

பந்தைத் தடுத்தாடும் குழுவைச் சேர்ந்த ஐம்பது பேரில் விக்கெட்டைச் சுற்றிச் சிலரும், மரத்தில் ஏறிக் கொண்டு சிலரும், கூரை மேல் நின்று கொண்டு சிலரும் பந்தைத் தடுத்தனர். பந்தை அடித்தாடிய குழு கடைசியில் எடுத்த ஓட்டம் ஒன்றே ஒன்றுதான். எதிர்க் குழு எவ்வளவு ஓட்டங்கள் எடுத்தது என்றுல் அதுவும் ஒரே ஒரு ஓட்டம்தான். ஆட்டம் சமரசமாகவே முடிந்து விட்டது !

### பந்தை எறியும் வேகம்

■ ஜி. டி. பி. டார்னர் என்பவர் எறிந்த பந்தின் வேகத்தைக் கணக்கிட்டபோது வினுடிக்கு 81 அடி வேகம் என்று அதாவது மணிக்கு 55 மைல் வேகம் என்று கண்டறிந்தனர்.

### பூஜ்யம்...பூஜ்யம்...பூஜ்யம்!

■ ஆட்டத்தில் அதிகமான ஓட்டம் எடுத்தவரையே நாம் அறிந்திருக்கிரேம். 14 இன்னிங்ஸ் தொடர்ந்து ஆடி 1907ம் ஆண்டு டெயஸ் என்பவர் எடுத்த ஓட்டத்தின் விவரத்தைக் கீழே தந்திருக்கிரேம். கண்டு கொள்ளுங்கள். 0,0,0,1,1,0,0,0,0,1,0,0,0,0. 14 இன்னிங்களில் அவர் எடுத்த மொத்த ஓட்டத்தின் எண்ணிக்கை மூன்றுதான்.

### கிரிக்கெட் ஆடியதற்குப் பரிசும் பாராட்டும்

■ இங்கிலாந்துக்கு எதிராக ஆடிய டெஸ்ட் மாட்சில் சதம் அடித்த முதல் இந்தியர் அமர்நாத். அவருக்கு அங்கே பார்வையாளர்களாக வந்திருந்த பெண்கள் தாங்கள் அணிந்திருந்த நகைகளேயே கழற்றிக் கொடுத்தனர். கோமகவர் ஒருவர் ஒரு லட்சத்துக்கு மேலும் இன்னெருவர் தம்முடைய காரையும் பரிசாகத் தந்தனர் என்று ஒரு வரலாற்றுக் குறிப்பு எடுத்துரைக்கிறது.

தொகுப்பு: எஸ். நவராஜ் செல்லேயா.






இந்த இருபதாம் நூற்றுண்டின் முற்பகுதியில் மாதாம் க்யூரி (Madame Curie) கண்டு பிடித்த ரேடியத்தின் அவகுணங்களை அவர் அறியவில்லை. அந்த ரேடியத்தைத் தமது கைக் கடிகாரத்தின் முட்களின் பேரில் பூசும் போது பூசும் பிரஷின் (Brush) மயிர் நுனிகளை நாக்கு நுனியில் தொட்டு நனைத்த தன் கேடான விளைவுகளில் ஒன்று வாயிலும் வயிற்றிலும் உண்டாகிய புற்றுநோய்.

அதே போன்று கருத்தடை மாத்திரையினுல் சில வருஷங்களுக்குப்பின் வேண்டாத விளைவுகள் ஏற்படலாம். அது பற்றித் தற்போது சொல்வதற்கில்லை. இன்னும் முப்பது அல்லது நாற்பது வருஷங்களுக்குப் பிறகு தான் தெரிய வரும். கருத்தடை மாத்திரையை நடைமுறையில் உபயோகிக்க ஆரம்பித்தது 1956ம் வருஷந்தான். இதைக் கொடுக்க முன்வந்த மருத்துவ நிபுணர்கள் இம்மருந்து புற்றுநோய்க்குக் காரணமாகலாம் என்று எண்ணியது உண்மை.

ஆகவே, இந்த மாத்திரைகளை நீண்ட காலம் உபயோகிப்பதன் காரணமாகப் புற்று நோய் வரக்கூடும் என்பதை மறக்கக்கூடாது. ஆனுல் இதற்குச் சான்று வெகு நுட்பமானதே. அவ்வப்போது பத்திரிகைகளில் மிகக் கடுமையான எச்சரிக்கைகளை மருத்துவ நிபுணர்களில் சிலர் விடுவித்து வருவதை நாம் காண்கிறோம். கூர்ந்து ஆராய்ச்சிகள் செய்யப்படாமலே சில எச்சரிக்கைகள் வெளியிடப்படுவதாகக் குறை கூறுபவர்களும் உள்ளனர். எவ்விதமாளுலும் நமது ஸ்திரீகள் நிர்ப்பயமாக மாத்திரைகளை உபயோகிக்கலாம் என்று வற்புறுத்தக் கூடிய துணிவு யாருக்கும் இல்லை. இத்தகைய துணிவு ஏற்படப் போதிய சாட்சியங்கள் கிடைக்கும்வரையில் நமது ஸ்திரீகள் காத்திருத்தல் நலம். பெண்கள் பற்பல அபாய நிலைகளைப் பற்றி நன்கு அறிந்து கொண்டு எதில் மிகக் குறைவான அபாயம் இருக்கக்கூடுமோ, அதை அறிந்து அனுஷ்டிக்கப் பயில வேண்டும்.

சென்னை — 17
15–12–72 டி.என்.எஸ்.ராகவாச்சாரி

சென்னையில் ஓடும் அரசுத் துறை பஸ்களில் எல்லாம் 'பல்லவா போக்குவரத்துக் கழகம்' என்று எழுதப்பட்டுள்ளது. 'பல்லவன்' அல்லது 'பல்லவர்' என்பதுதான் தமிழ். பல்லவா என்பது ஆங்கிலத்தில் இருப்பதை அப்படியே உச்சரிப்புக் குறையாமல் பெயர்த்த தாகும். இதுதான் தமிழைக் கட்டிக் காக்கும் திருப்பணியா?

அரியலூர்
18–12–72 துறவி

தங்கள் 21–1–73 தேதியிட்ட கல்கி இதழில் 62ம் பக்கத்தில் கண்டுள்ள துணுக்கில் ''சிம்லா மாநாடு முறிந்து ஊர் திரும்பும் போது'' என்று குறிப்பிட்டிருக்கிறீர்கள். அது தவருகும். சிம்லா மகாநாடு வெற்றியுடன் முடிந்ததைத் தாங்கள் அறிவீர்கள். சிம்லா மாநாடு 'முடிந்து' என்று அச்சாகி யிருக்க வேண்டும்.

சென்னை—26
19–1–73 ஹரிஹரன்

டெல்லியில் நடந்த தேசிய அபிவிருத்திக் கவுன்சிலில் தாம் பேசியது பற்றி முதலமைச்சர் கருணாநிதி விளக்குகையில், ''இன்று ஒரு வக்கீலோ அல்லது டாக்டரோ தங்களது உண்மையான வருவாய் முழுவதையும் கணக்கில் காட்டுவதற்கு அபரிமிதமான வரி விதிப்புத் தான் தடையாக இருக்கிறது. இந்த வரிகள் 15 அல்லது 20 சத விகிதம் குறைக்கப்பட்டால், தொழில்களில் ஈடுபட்டவர்கள் தங்களது உண்மையான வருவாய் முழுவதையும் கணக்கில் காட்டுவதுடன் தங்களது சேமிப்பையும் முதலீடு செய்ய முன்வருவார்கள்'' என்று கூறியிருக்கிறுர்.

திரு கருணாநிதியின் சக மந்திரியான திரு க. ராசாராம் ஒரு நிகழ்ச்சியில் பேசுகையில் ''அரசுத் துறையில் உள்ள வீட்டு வசதி வாரியம் போன்ற அமைப்புக்கும், தனியார் அமைப்புகளுக்கும் 'ஆரோக்கியமான போட்டி'த் தன்மை இருந்தால்தான் செய்திறனும் பொதுமக்களுக்கு அதனுல் நன்மையும் விளையும்'' என்று பேசியிருக்கிறுர்.

''தற்போதைய தேர்தல் முறைகளில் நிறைய செலவழிக்க வேண்டியிருக்கிறது. தகாத முறைகளைக் கையாண்டு அரசியல் கட்சிகள் தேர்தல் நிதி வசூலிக்கின்றன. தோற்றவர்கள் நலிந்து போகிறுர்கள். ஜெயித்தவர்கள் பதவி தரும் வசதி வாய்ப்புக்களைத் தவறுன முறையில் பயன்படுத்திக் கொண்டு பொருளீட்டி மேலும் வரும் தேர்தல்களுக்கு வேண்டிய வசதிகளைத் தமக்கும் தமது கட்சிக்கும் செய்து கொள்ளுகிறுர்கள். இதனுல் லஞ்ச ஊழல்கள் நிலைத்து வருவதுடன் ஜனநாயகமே கேலிக் கூத்தாகி விடுகிறது. எனவே தேர்தல் செலவுகள் குறையும் முறையில் அடிப்படை மாறுதல்கள் தேவை'' என்று ஈரோட்டில் மத்திய மந்திரி திரு சி. சுப்பிரமணியம் பேசியிருக்கிறுர். இவையெல்லாம் ராஜாஜியும் அவரது சுதந்திரக் கட்சியும் நீண்ட நெடுங் காலமாகக் கூறி வந்திருப்பவையே அல்லவா?

பேச்சளவோடு நில்லாமல் ஆள்பவர்கள் ராஜாஜியின் கொள்கைகளைச் செயல்படுத்தவும் முன்வந்தால் எவ்வளவு நன்றுயிருக்கும்?

செந்தண்ணீர்புரம்,
திருச்சி—4 புரசை ராஜகோபால்

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras 600031
Managing Editor: T. Sadasivam

